SHIVAJI
TAMIL WEEKLY



சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
30th year
of Publication

4—7—1965

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ஆசிரியர்: திருலோகசீதாராம்

# பீகிங்கின் பிடிக்கு ஒரு இடி !

சில தினங்களுக்கு முன்பு அல்ஜீரியாவில் திடீர் ராணுவப் புரட்சி ஒன்று நிகழ்ந்து, அதிபர் பென்பெல்லாவின் தலைமை அகற்றப்பட்ட சம்பவங்கள், பொதுவாக உலக அரசியல் வானில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது என்றாலும், தனிப்பட்ட முறையில் இந்தோனேஷியாவின் அதிபர் சுகர்ணோவிற்கும், சீனப் பிரதம மந்திரி சூ-என்-லாய்க்கும் பென்பெல்லாவின் வீழ்ச்சி பெருத்த அதிர்ச்சியை அளித்தது வெளிப்படை. அல்ஜியர்ஸில் நடைபெறவிருந்த ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் மகாநாட்டில், மலேஷியாவிற்கு எதிராக டாக்டர் சுகர்ணோவும், வியட்நாம் விவகாரத்தில் சூ-என்-லாயும் தங்களுக்குச் சாதகமான சூழ்நிலையைத் தோற்றுவித்துக் கொள்வதற்கு, பென்பெல்லாவின் நட்பையே பெரிதும் நம்பியிருந்ததால் அல்ஜீரிய அரசியலில் ஏற்பட்டிருக்கும் எதிர்பாராத திருப்பமும், ஆட்சித் தலைமையின் மாற்றமும் இவ்விரு தலைவர்களின் நாடியைத் தளரச்செய்துவிட்டிருப்பது இயற்கையே. அல்ஜீரியாவில் நடைபெற்ற புரட்சி, முழுக்கமுழுக்க ஒரு உள்நாட்டுவிஷயம். ஆனால் பென்பெல்லா 'ரத்தம் சிந்தும் புரட்சியில்' மோகமும், அத்தகைய கொள்கைகளும், அதை ஒட்டிய நடைமுறைகளும் அமுலிலிருக்கும் நாடுகளிடம் விசேஷ நம்பிக்கையும் உள்ளவராகக் கருதப்பட்டதால், அல்ஜிரியாவின் உள்நாட்டு நிர்வாகப் போக்குகளில்கூட கம்யூனிஸ நாடுகளின் கண்காணிப்பு மலிந்துகிடந்தது.

சாதாரணமாக இஸ்லாமிய நாடுகளின் ராஜீயத் தலைவர்களுக்கு கம்யூனிஸ-நாசவெறிச் சித்தாந்தங்களில் பிடிப்பு இருந்தது கிடையாது. ஐக்கிய அரபுக் குடியரசில் இணைந்துள்ள பல நாடுகளை இதற்கு உதாரணமாகச் சுட்டிக்காட்ட முடியும். ஆயினும் அதிபர் நாஸரைப் போன்ற பெருந் தலைவர்களில் ஒரு சிலர் தங்களுடைய போக்குகளுக்கும் சவால்களுக்கும் அனுசரணையாக மாஸ்கோ, பீகிங், ஜாகர்த்தா ஆகியவற்றின் ஆட்சித் தலைவர்களது எதிரொலியை எதிர்பார்க்க ஆரம்பித்ததினால், படிப்படியாக கெய்ரோ, அல்ஜியர்ஸ் போன்ற இடங்களில் கம்யூனிஸ வாடை அதிகரித்து வந்ததைத் தவிர்க்க முடியாதுபோய்விட்டது. இறுதியில் நாஸரும், பென்பெல்லாவும்கூட ஒவ்வொரு விஷயத்திற்கும் சூ-என்-லாயையும், அதிபர் சுகர்ணோவையும் கலந்துகொள்ளும்படியான நிர்ப்பந்தச் சூழ்நிலைக்குப் பணியவேண்டியதாயிற்று.

ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் மகாநாடு காலவரம்பின்றி ஒத்திவைக்கப்பட வேண்டும் என்று லண்டனில் காமன்வெல்த் பிரதமர்கள் மகாநாட்டில் கலந்துகொள்ளக் கூடியிருந்த ஆசிய-ஆப்பிரிக்க தேசாதிபதிகள் அனைவரும் ஏகமனதாகக் கோரிய பின்பும், அதிபர் சுகர்ணோவும், சூ-என்-லாயும், அதிபர் நாஸரின் பக்கபலத்தோடு அல்ஜியர்ஸில் குறிப்பிட்ட தேதியில் எப்படியும் மகாநாட்டை நடத்திவிடவேண்டும் எனப் பெருமுயற்சிகள் செய்ததை நினைக்கும்போது, ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் மகாநாட்டைப் பயனுள்ள வகையில் இயங்கச் செய்வதில் இவர்களுக்கு ஆதிமுதலே விருப்பம் இருந்ததில்லை என்பது ருஜுவாகிறது. அமைதியான சூழ்நிலையில் கூடும் மகாநாடுகளையே தங்களது பிரசார வேட்டுகளினால் குட்டிச்சுவராக்குவதில் நிபுணர்களான அதிபர் சுகர்ணோவும், சூ-என்-லாயும், பென்பெல்லாவின் ஆதரவாளர்கள் தொடர்ந்து பயங்கர ஆர்ப்பாட்டங்களில் ஈடுபட வாய்ப்பிருக்கும் குழப்பமான கட்டத்தில், ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் மகாநாடு கூடினால், தங்களது ஆக்ரமிப்புக் கொள்கைகளை மற்றவர்கள் இனங் கண்டுகொள்ள முடியாமல் குளறுபடி செய்து, தங்களது நோக்கங்களுக்கு எப்படியும் நியாயம் தேடிக்கொள்ளலாம் எனத் திட்டமிட்டதில் புதுமையேதுமில்லை. அதிபர் நாஸர் அல்ஜியர்ஸில் ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்டிருந்த நிகழ்ச்சி நிரல்களின்படி மகாநாடு நடைபெறவேண்டியது அவசியம் என தாக்கீது விடுத்ததற்கு சூ-என்-லாய் கெய்ரோவில் வாரக்கணக்கில் முகாமிட்டுக்கொண்டு, அதிபர் நாஸரை ஆட்டிப் படைத்து வந்ததே காரணம் என யுகோஸ்லோவியாவின் நாளிதழொன்று சாடியிருக்கிறது. அதிபர் டிட்டோ அமைதியற்ற சூழ்நிலையில் உலக சமாதானம், சுபிட்சம் ஆகியவற்றைப்பற்றி பொதுப்படையாகவும், ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் ஒருமைப்பாடு, வளமான எதிர்காலம் ஆகியவை குறித்து விசேஷமாக விவாதிக்கவும், முடிவெடுக்கவும் கூடும் மகாநாடொன்றை நடத்துவது ஏற்புடையதல்ல என்பதோடு, மகாநாட்டின் நோக்கங்களுக்கு சுற்றி நிலவும் அரசியல் அமளி, ஏறுக்கு மாறான பெருத்த எதிர் விளைவுகளையே கொடுக்கும் என்றும் தெரிவித்திருந்த கருத்தையும் அந்தப் பத்திரிகை வெளியிட்டு, ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் மகாநாடு ஒத்திவைக்கப்படக் கூடாது என்பதில் அதிபர் நாஸர் காட்டும் அக்கறை, சுயேச்சையானதல்ல, சில நாடுகளின் கைப்பாவையாக மாறி, அவைகளின் கருத்தையே ஐக்கிய அரபுக் குடியரசு நாடுகளின் கருத்தாகக் காட்டிக்கொள்ளப் பெரும்பாடுபடுகிறார் என நாஸரின் தர்ம சங்கடமான—அவரே வலிந்து வாங்கிக்கொண்டிருக்கும் உறவுமுறைகளின் எதிரொலிகளைச் சுட்டிக் காட்டியிருக்கிறது.

அல்ஜீரியாவின் புதிய அதிபர் அல்ஜியர்ஸில் குறிப்பிட்டநாளில் ஆசிய—ஆப்பிரிக்க நாடுகளின் மகாநாடு

**ஏ. ஆர். ராஜாமணி**

நடைபெறுவதில்தான் தன்னுடைய ஆட்சியின் எதிர்காலமும், உறுதியும் அடங்கியிருப்பதாக நினைத்து, இரண்டு விசேஷத்தூதவர்களை லண்டனுக்கு அனுப்பி, அங்குக்குழுமியிருந்த ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் ராஜீயத் தலைவர்களைப் பேட்டி கண்டு, மகாநாட்டை ஒத்திவைக்கும் அவர்களது தீர்மானத்தை ரத்து செய்வதற்கான முயற்சிகளை மேற்கொள்வதில் தீவிரக் கவனம் செலுத்தியும், அல்ஜீரியாவின் இன்றைய அரசாங்கத் தலைமைக்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கும் புரட்சிக்காரர்களின் மனப்போக்கினால் தங்களது பந்தோபஸ்துக்கும், அல்ஜியர் மகாநாட்டின் செயல்முறைகளுக்கும் பேராபாயம் ஏற்படக்கூடும் என அஞ்சப்பட்டதால் ஆசிய-ஆப்பிரிக்கநாடுகளின் உயர் தலைவர்கள், லண்டனிலிருந்து திட்டமிட்டபடி அல்ஜீயர்ஸுக்குப் பயணப்படாமல் தமது தலைநகரங்களுக்குத் திரும்புவதையே பெரிதும் விரும்பினார்கள்.

எனவே, அல்ஜீரியாவின் இன்றைய அதிபரின் முயற்சிகளும், நாஸர்–சுகர்ணோ–சூயென்லாய் ஆகியவர்களின் பிடிவாதமான வற்புறுத்தல்களும் பயனற்றுப்போயின. ஆசிய ஆப்பிரிக்கத் தலைவர்களின் உறுதியைக் கண்டதும், மகாநாடு நடைபெறாவிட்டாலும் பரவாயில்லை வெளிநாட்டு மந்திரிகளின் அந்தஸ்தில் உயர்மட்டக் கூட்டமொன்றாவது அவசியம் அல்ஜியர்ஸில் நடந்தாக வேண்டும் என சூயென்லாயும், சுகர்ணோவும் சொன்னதோடு மட்டுமல்லாது, தங்களது பங்கிற்கு தூதுகோஷ்டியொன்றையும் வெளி உறவு மந்திரிகளின் தலைமையில் அனுப்பிவைத்தார்கள்.

ஆனால், பாரதத்தின் வெளியுறவு இலாகா அமைச்சர் ஸ்வரண்சிங் உட்பட பல நாடுகளின் அமைச்சர்கள், கடைசி நிமிஷத்தில் தங்களது பிரயாணத்தை ரத்துசெய்துவிடவே, சைனாவிற்கும் — இந்தோனேஷியாவிற்கும் மேலும் பெருத்த ஏமாற்றமாயிற்று. பாகிஸ்தானின் புத்திசாலித்தனமிகுந்த வெளிநாட்டு மந்திரியான ஸ்ரீ பூட்டோ கூட தன்னுடைய அல்ஜியர்ஸ் பயணத்தை ஒத்திவைத்துவிடுவார் என்பதை சைனா எதிர்பார்க்கவேயில்லை.

இவ்வாறு பலமுனைகளிலும் தங்களுடைய நயவஞ்சகத் திட்டங்களுக்குச் சாவு மணி அடிக்கப்படுவதைக் கண்ட சைனாவும்–இந்தோனேஷியாவும் இனி என்ன செய்வது என்றறியாமல் குழம்பிக் கொண்டிருக்கின்றன. ஏனெனில், காமன்வெல்த் மகாநாட்டில் ஆசிய–ஆப்பிரிக்க நாடுகளின் உயர்தலைவர்களால் ஒருமனதாக அங்கீகரிக்கப்பட்ட, 'வியட்நாம் சமாதானக்குழு' யோசனையை செயலற்றதாக்கச் செய்வதற்கு, அல்ஜியர்ஸில் கூடவிருந்த மகாநாட்டையே சைனாவும், இந்தோனேஷியாவும் எதிர்பார்த்திருந்தன. இதற்கு முன்பு தனிப்பட்ட முறையில் அந்த யோசனைக்குத் தொடர்ந்து எதிர்ப்புத் தெரிவித்து வந்திருப்பதுடன், பீகிங்கிலும், ஜாகர்த்தாவிலும் அந்த சமாதானக்குழுவை அனுமதிக்க மாட்டோம் என்றும் சூயென்லாயும், டாக்டர் சுகர்ணோவும் கூறிவந்திருக்கின்றனர். வியட்நாம் விவகாரத்தில் சுமுகமான எதிர்காலம் அமைவதற்கு, ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் வல்லமை வாய்ந்த ஆட்சித் தலைவர்கள் பலரைக் கொண்ட சமாதானக்குழு ஒன்றை நிறுவி, வியட்நாம் சிக்கலில் நேரடித் தொடர்புள்ள நாடுகளுடன் பேச்சுவார்த்தைகள் நடத்துவதின்மூலம் வியட்நாம் குழப்பத்திற்கு நேர்மையான முடிவொன்றைக் காண வேண்டுமென்பது இந்த யோசனையின் நோக்கம்.

ஆனால், அதிபர் ஜான்ஸனின் மோசடிகளுக்கு மேலும் ஊக்கமளிக்கவே, இந்தத் திட்டம் வகை செய்யும் என வக்கரிப்புவாதம் செய்து வருகின்றது சைனா. இதில், சம்பந்தமில்லாமல் இந்தோனேஷியாவும் இணைந்து கொண்டு, விஷயத்தை மேலும் சிக்கலாக்கிக் கொண்டு வருவதைப் பார்த்தால் ஜாகர்த்தாவும், பீகிங்-ராவல்பிண்டி அச்சில் கூட்டுசேர்ந்து கொண்டு, பாரதத்திற்கு எதிரானவிஷமத்தனங்களிலும், ஐ. நா. வின் உலக சமாதானப்பணிகளை ஸ்தம்பிக்கச் செய்யும் போக்கிலும் தீவிர ஈடுபாடு காட்ட ஆரம்பித்துவிட்டதோ என சந்தேகிக்கத் தோன்றுகிறது. ஐ. நா. சபையிலிருந்து ஏற்கனவே இந்தோனேஷியா வெளியேறிவிட்டிருந்த போதிலும், அதனுடைய சுயேச்சையான ஏகாதிபத்திய இயல்புகளுக்குத் தகுந்த கூட்டுறவு கிடைக்காத காரணத்தினால், மலேஷியா விவகாரத்தோடு அது அடங்கிக் கிடந்தது. இப்போது சைனாவும், பாகிஸ்தானும் இந்தோனேஷியாவை நோக்கி நேசக்கரங்களை நீட்டத் தொடங்கவே, அதிபர் சுகர்ணோவின் உற்சாகம் அளவுகடந்ததாகிவிட்டிருக்கிறது!

மொத்தத்தில், வியட்நாம் விவகாரம் அமெரிக்கர்களுக்கும் — கம்யூனிஸ்டுகளுக்கும் இடையேயான ஒரு தனிப்பட்ட விவகாரமல்ல என்பது தெளிவு. தனி மனித மனச்சாட்சியும் — ராஜநீதியும் இணைந்துள்ள நாடுகளுக்கும் – உலக ஜனநாயகத்தத்துவத்திற்கு அடிவேர் தங்கள் நாட்டில்தான் ஊன்றியிருக்கிறது என்று கருதும் மதர்ப்புமிகுந்த வல்லரசு ஒன்றுக்கும் இடையேயான விவகாரமிது. எனவேதான், பாரதம் வியட்நாம் விஷயத்தில் தார்மீகமான போக்கைத் துணிந்து கடைப்பிடித்து வருகிறது. இதற்காக அந்த மாபெரும் வல்லரசின் சீற்றத்திற்கு ஆளாக நேர்ந்த கட்டத்திலும் கூட, பாரதம் அதை ஒரு பொருட்டாகக் கருதாமல், வியட்நாம் விஷத்தில் மனிதாபிமானத்தோடு நடந்துகொள்ளவே உறுதிகொண்

(8-ம் பக்கம் பார்க்க)

# பேரின்ப வாழ்வு

திரு. இ. வே. சோமசுந்தரம், B.A., P & A (DIP)

இராமகிருஷ்ண விஜயம், மாசிகையிலிருந்து மறுபதிப்பு.

## 22. வாழ்வின் துயரங்களைச் சிந்தித்தல்

இறைவன் இணையடி நோக்கி உனது மனத்தைத் திருப்பினால் அன்றி நீ எங்கிருந்தாலும் எந்தப் பொருளையோ, இலட்சியத்தையோ குறித்து மனதைச் செலுத்தினாலும் நீ துயரத்திலேயே மூழ்கினவன் ஆவாய்.

உனது விருப்பப்படி அல்லது போக்கின்படி காரியங்கள் கைகூடாவிடில் ஏன் துயர் உறுகிறாய்?

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன் —(குறள்)

தன் மன விருப்பப்படி முழுதும் அடையப் பெறுபவன் எவன் உளன்? நானோ அன்றி நீயோ அன்றி இம் மன்பதை மேல் உள்ள எம் மனிதனுமே அப்படி அடைவதே இல்லை.

மண்டலத் தலைவராகப் பேரரசராக இருப்பவரானாலும், பெரும் மடத்தலைவர் ஆனாலும் ஏதாவது ஒரு துயரமோ குழப்பமோ இல்லாதவரே இவ்வுலகில் இல்லை.

மிக மகிழ்ச்சியுடன் இன்ப நிலையில் இருப்பவன் எவன்? எவன் ஒருவன் இறைவனுக்காக, நடமாடும் கடவுளர்களாகிய மக்களுக்காகத் தியாகத் தூய வாழ்வில் துன்புறுகிறானோ, அவனே அத்தகைய இறை இன்பத்தை அடைகிறான்.

2. உறுதியற்ற சோம்பர் பலர் சொல்வர், 'இதோ, இவர் எத்தகைய இன்பவாழ்வில் இருக்கிறார்? எவ்வளவு செல்வத்துடன் எவ்வளவு செல்வாக்குடன் அதோ அவர் இன்புறுகிறார். அந்தச் செல்வர் செலுத்தும் ஆணையும் அதிகாரம் பெற்றிருக்கும் பெருமையும் சிறப்பும் அளவற்றிருக்கின்றனவே.' என்று,

ஆனால் தெய்வீக ஆன்மப் பேறுகளையும் பெருமையையும் கருதிப்பார். அப்போது இவ்வுலகப் பொருள்கள் ஒரு கணக்கில் சேர்க்கத் தகுதியற்ற அற்பங்கள் எனக் காண்பாய், இவை நிலையற்றவை என்று நீ அறிவாய். மற்றும் கவலையும் அச்சமும் கொண்டு சேர்த்துக் காக்க வேண்டியிருத்தலால். இவ்வுலகப் பொருள்கள் பெரும் பாரமாகவே இருக்கும்.

அளவற்ற உலக இன்பப் பொருள்களைப் பெற்றிருப்பதில் மனிதனின் இன்பம் இல்லை, அவனுக்கு இன்றியமையாத தேவைக்கு வேண்டிய அளவு, பொருள்களைப் பெற்றிருப்பதே போதும்.

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது -குறள்

என்றபடி ஓர் அளவுக்கு மேல் எம்மனிதனும் அனுபவித்துவிட முடியாது.

உண்மையில் இவ்வுலகில் வாழ்வதே பெருந்துயரம், எவ்வளவுக்கு எவ்வளவு தூய அறவாழ்வு வாழ ஒரு மனிதன் விரும்புகிறானோ அவ்வளவுக்கவ்வளவு இத்தற்போதைய வாழ்வு கசப்பாக ஆகிறது. ஏனென்றால் அத்தகைய அறவாழ்வு வேண்டுபவன் இம்மனித வாழ்வின் குறைபாடுகளையும் உள்ளம் கறைகளை அடைவதையும் தெளிவாகப் பார்க்கிறான்; விளக்கமாக உணர்கிறான். 'லோகம் சோக ஹதம்ச்ச சமஸ்தம்', என்கிறார் ஸ்ரீ சங்கரர்.

உண்மையில் இறை நிலை வேண்டும் அறவாழ்க்கையாளன் பாபங்கள் அனைத்திலிருந்தும் விடுபட்டுப் பற்றற்று நிற்பதையே மகிழ்வுடன் விரும்புவான். அத்தகையவனுக்கு உண்பதும், உறங்குவதும், குடிப்பதும், மற்றும் தன்னைத் தீமையினின்று காப்பதும் உழைப்பதுவும் ஓய்வு எடுப்பதுவும் மற்றும் இவ்விரிந்த உடல் மனத் தேவைக்குட்பட்டு இருப்பதுவும் எல்லாம் ஐயம் இன்றிப் பெருந் துயரும் வருத்தமும் அளிப்பனவாம்.

3. இவ்வுலகில் வாழுங்கால் இப்பருவுடல் வெளித் தேவைகளைத் தேட வேண்டி இருக்கும் நிர்ப்பந்தத்தால் தூய அறவாழ்க்கை நாடுவோன் துன்பப்படுகிறான்.

அதனால் தான் அறவாழ்க்கைப் பெரியார் ஒருவர் உள்ளார்ந்த பெரும்பக்தியுடன் இறைவனை நோக்கி 'ஓ! இறைவனே அடியேனை எனது துயரக்கடலிலிருந்து கரையேற்றும் ஐயனே' என்று மன்றாடிக் கேட்கிறார் 'படமுடியா தினித்துயரம் பட்டதெல்லாம் போதும்' என்று கதறுகிறார் பிறிதொருவர்.

ஆனால் தங்கள் துன்ப நிலையை உணராத அறிவிலிகள் கேடு அடைவர். இந்தத் துயர மயமானதும், தீமையில் திளைக்கும்படி செய்வதுமான வாழ்வின் மேல் காமுறும் கயவர்கள் அதனினும் பெருங்கேடு உறுவர்.

அப்படிக் காமுறும் குருடர் உண்டா? எனும் ஐயம் எழலாகும். மிகக் கடும் உழைப்பாலோ அன்றி இறப்பதாலோ தங்கள் இன்றியமையாத தேவைகளைப் பெறுவதற்கே பேரவதிப்பட்டாலும் கூட இத்துன்பம் நிறைந்த வாழ்வை விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டு இருப்பவர் உளர் சிலர். அத்தகைய துன்பங்களுக்குள்ளேயும்கூட இவ்வனித்தியத் துயர்நிறைந்தஉலகிலே எப்போதும் இருக்க முடியுமானால் அம்மூடர் இறைநிலை விண்ணுலகை விநாடி கூட விரும்பார்.

4. ஆ! என்ன அளவற்ற அறியாமை இம்மனிதருக்கு! நன்னிலைகளில் எவ்வளவு நம்பிக்கை அற்ற உள்ளத்தினர் இவர்! இம்மண்ணுலகில் எவ்வளவு ஆழப் பதிந்துள்ளார்கள்! அந்தோ! இவர்கள் இப்பருவுடல் போகங்களைத் தவிர வேறு ஒன்றையும் உணராத நிலை அடைந்துளரே.

ஆனால் துன்பத்தையே துய்க்கும் இவர்கள் முடிவில் காண்பது என்ன? தாங்கள் தேடி விரும்பியவை, துச்சமான, பயனற்றவையே என்று காண்பர். கண்டு மனம் ஒடிந்து நிற்பர்.

அதற்கு மாறாகக் கடவுட் தன்மையுள்ள பெரியார்களும் இறைவன் இணையடியை அடைய ஆர்வமுள்ள அன்பர்களும் செய்வது என்ன? இப்பருவுடல் ஊன இச்சைகளுக்கு இன்பம் அளிப்பனவற்றையோ இவ்வாழ்வில் சிறப்பாகத் தோன்றுவனவற்றையோ ஒரு பொருளாகக் கருதி தேடித்திரிவதில்லை என்றும் அழியாத செல்வமான அழியாத பேரின்பப் பெருவாழ்வைத் தங்கள் முழு மனதுடன் தம் குறிக்கோளாகக் கருதி இடையறாது நாடி அடைந்தார்கள்.

நீடூழி நிலைத்துள்ளவைகளையும் கட்புலனாகாத மேலான நிலைகளையும் நாடித் தங்கள் ஆசையின் போக்கை மேலே செலுத்தினர். அப்படிப்பட்ட உயர்ந்த நிலைகளின் மேல் செலுத்திய நாட்டத்தால் நிலையற்ற பருவுடல் இச்சைப் பொருள்களை நாடிக் கீழ் நோக்கிப் பாயும் மனப்போக்கையும் தங்களின் வீழ்ச்சியையும் தடுக்க வழி பெற்றனர்.

5. ஓ என் சோதரனே! மேலான தூய்மை நிலை அடைவதில் முன்னேற்றம் அடையலாம் என்னும் உனது நன்னம்பிக்கையை இழந்துவிடாதே. அதற்கு நற்காலம் இருக்கிறது முற்போக்கு எய்தக் கூடிய வாய்ப்பும் வசதியும் இன்னும் கழிந்து போய்விடவில்லை. அத்தகைய மேலான தூய்மையை அடைந்தே தீர வேண்டும் என்ற உயர்ந்த திட வைராக்கியத்தை மனநல் உறுதி நிலையைக் கொள்வதில் ஏன் நாளுக்கு நாள் காலம் தாழ்க்கின்றாய்.

இதே விநாடியில் உறுதியுடன் தூய வழியில் செல்லத் தொடங்கு! தீமைக் கவர்ச்சியைத் துச்சமென உதறிவிடு! அற்ப நினைப்புகளை விட்டுமாறாமன உறுதியுடன் மேல் நிலை எய்த எழுந்து நில்! உனக்கே உணர்ச்சியுடன் பின் காண்கிறபடி உறுதிகூறிக்கொள்! இதுவே ஊக்கத்துடன் உழைக்கும் நேரம்!' இந்த விநாடியே என்னைத் திருத்திக் கொள்ளச் சரியான நேரம்.

நீ மனக் குழப்பத்துடன் இருக்கும்போதும் தீமையின் பால் இழுக்கப்பட்டுத் தொந்திரவு அடையும் நேரத்திலும் தான் உண்மையான இறை அருளை இறைஞ்சிப் பெறத்தகுதியான தேவையுள்ள காலம்.

கடும் மழையிலும் புயலிலும் பெரும் நெருப்பிலும் அடிபட்டு வாடி வதங்கி போவதுபோன்ற கடும் சோதனைகளில் சிக்கித் திக்குமுக்காடிச் சீராக வெளிவந்த பிறகுதான் தெய்வீக இன்ப ஓய்வு பெறும் நிலை அடைவார்.

தூய்மைக்காக உயிரையே விடத்தயாரான உண்மையான உள்ளத் துணிவுடன் உன்னைத் தூய்மையாகவே இருக்கும்படித் திடமாகக் கவனமாக, மிக மிகக் கண்டிப்பாகக் கட்டுப்படுத்தி வைத்துக்கொள்ளாவிட்டால், நீ ஒருகாலும் தீமைக் கவர்ச்சியை வெற்றி கொள்ளப் போவதில்லை. தீமையில் அந் நற்றுணிவு இல்லையானால் தீவினைப் பிடியிலிருந்து விடுதலை அடைவது என்றும் முடியாது.

இந்த ஊன உடலைப் போர்த்துக்கொண்டுதிரியும் வரை நாம் தீமை நாட்டம் இன்றியோ தீச்செயல் இன்றியோ இருத்தல் இயலாது. களைப்பும், கவலையும், நலிவும் நோயும் இன்றி வாழ முடியாது.

இத்துன்பங்கள் அனைத்திலிருந்தும் விடுதலைபெற்று அமைதியாக இருப்பது நாம் மிக மகிழ்ச்சியுடன் விரும்புவது போல் இருப்பது உண்மைதான். ஆனால் தீய சிந்தனை சொல் செயல்களில் நமது மேலான தூய்மையை இழந்துவிட்ட நாம் அதனுடன் கூடவே உண்மையான இன்ப நிலையையும் மறந்து இழந்துவிட்டோம்.

ஆதலால் நாம் பொறுமையுடன் முயல்வதே முறை. இறைவன் தனிப் பேரருளை எதிர் பார்த்துக் காத்திருக்க வேண்டும். இச் சீரழிந்த தீய நிலை ஒழியும் வரையும், இந்நிலையற்ற இழிநிலைமாறி, மாறாது நீடூழி நிற்கும் தூய்மைத் தன்மை பெறுகிற வரையிலும், முயலவேண்டும்.

6. அந்தோ! மனிதருடைய மனம் எவ்வளவு உறுதியற்றதாக இருக்கிறது! எப்போதும் தீயவற்றையே நாடி ஓடிக் கெடுக்கிறதே!

இன்று நீ உன்னுடைய தீய சிந்தனைகளையும், சொற்களையும், செயல்களையும், வெளிப்படக் கூறி கழிவிரக்கப்படுகிறாய். ஆனால் அந்தோ! மறுநாளே அதே தீயவைகளைச் செய்கின்றாயே!

உன் நடத்தைகளைப் பற்றி கூர்ந்து நோக்கி அமைதிபெற இப்போது திடங்கொள்ளுகிறாய்? ஆனால் அந்தோ! சிறிது நேரத்தில் நீ நடப்பதைப் பார்த்தால் — அவ்விதத் தூய்மை நாட்டம் உள்ள தீர்மானம் ஒன்றுமே எப்போதுமே செய்யாத ஒருவனைப் போல் காணப்படுகிறாய்.

ஆதலால் எப்போதும் மிக மிகப் பணிவுடன் நாம் இருத்தலே முறை. நாம் தூய்மையையோ, திறமையையோ கட்டுப்பாட்டு உறுதியையோ பற்றித் தற்பெருமை கொள்ள ஒரு சிறிதும், ஒருபோதும் இடமோ தகுதியோ, நமக்கு இல்லை. ஏனெனில் நாம் அவ்வளவு உறுதியற்றவர்களாகவும் ஒருமை மனத்திண்மை அற்றவர்களாகவும், விநாடி தோறும் மாறுபடும் இயல்பு உள்ளவர்களாகவும் உள்ளோம்.

அது மட்டுமா? சிறிது உள்ளத் தூய்மையையோ அல்லது அகத்தின் அமைதியையோ பல ஆண்டுகளாக மிக அரும் பாடுபட்டு முயன்று இறைவன் அருளால் அரிதில் பெற்றதை மிக விரைவில் வெகு எளிதில் நாம் அசட்டையான தன்மையால் இழந்துவிடுகிறோம்.

7. ஆர்வதுடனும் ஆராய்ச்சி அறிவுடனும் முயலும் நமது இந்தத் தூய்மை தேடுவதில் இவ்வளவு விரைவில் அவ்வளவு அசட்டையான நிலையை நாம் அடைந்து விடுகிறோம். முடிவில் என்ன நிலைமைக்கு இறங்கி இழிநிலை எய்துவோம் என்று நினைக்கவே அச்சம் ஆகிறது.

நமதுபேச்சிலோ உயர்ந்த தூய்மையின் அறிகுறி கூட இல்லை! நீ தீநீர்மைகளை விட்டுத் தூய்மைத் தன்மையை அகத்திலோ புறத்திலோ பெற்றுவிடவில்லை. அதற்குள் நாம் பேரமைதி நிலையும் தீமையிற் சிக்காத தூய்மைத் திண்மையையும், பெற்றுவிட்டதாகவும் எல்லாம் எளிதாகஏற்பட்டுவிட்டதாகவும் எண்ணி ஏமாந்துவிடுகிறோம். அப்படி அசட்டையாக நல்ல கட்டுப்பாடுகளைக் களைந்து இச்சைப்படி இன்பம்பெற இசைந்துவிட்டோமானால் இழிவும் அழிவும் அந்தோ! நமக்கு ஏற்பட்டே தீரும்.

எதிர் காலத்திலாவது ஆன்மத் துறையில் சிறந்த முன்னேற்றமடைய வேண்டும். குணக்குறைபாடுகளைக் களைந்து களங்கமற்ற சீரிய நிலை பெறவேண்டும். அதற்கு அவா இருந்தால் புதிதாகத் தூய்மையை நாடித் தீவிரமாக முயலும் இளைஞர்களைப்போல மீண்டும் மீண்டும் கட்டுப்பாடுகளைக் கைக்கொண்டு நாம் தூய்மை நிலையை ஆர்வத்துடன் அடைய முயன்று கொண்டே இருத்தல் வேண்டும்.

இங்கே போய் வந்தேன் :

# கொல்லி மலைக் காடுகளில் !

மைசூர் ராஜ்யத்தின் சிவசமுத்திர அருவியையும் தமிழ் நாட்டின் குற்றால அருவியையும் சென்று காணவும் அங்கே தங்கியிருக்கவும் வசதி இருப்பதால் அவை நமக்கு நன்கு அறிமுகமாகியுள்ளன.

இங்கே கொல்லிமலையில் அறப்புளீஸ்வரர் கோயிலுக்குக் கிழ்ப்பகுதியில் சுமார் 500 அடி உயரத்திலிருந்து செங்குத்தாக விழும் ஆகாசகங்கை பற்றி யாருக்கும் அதிகம் தெரிய வாய்ப்பில்லை. கோயிலிலிருந்து நேர்முகமாகக் கிழக்கே சரிந்து செல்லும் பாதை நம்மை சற்றேறக்குறைய ஆயிரம் அடிகளுக்குக் கீழே கொண்டுபோய்ப் பின்பு மேலே கொண்டுவருகிறது. வழிபுதர்களிடையேயும் முட்செடிகளிடையேயும் வழுக்கிவிடும் பாறைகளிடையேயும் அமைந்திருக்கிறது. தவறிக் கீழே விழுந்தால் அறுபது எழுபது அடிப்பள்ளத்தில் முட்செடிகளினிடையே விழவேண்டிய அபாயமுமுண்டு. ஆங்காங்கு இரும்புக்கம்பிகளை ஆதாரமாக அமைந்திருந்த அடையாளம் தெரிகிறது. அவைகளின் மதிப்புணர்ந்த யாரோ அப்புறப்படுத்தி விட்டார்கள் – ஆடிப்பதினெட்டின் போதே மக்கள் அதிகமாக வருவதால் அப்போது மட்டும் பாதையைச் செப்பனிட முயல்வார்களாம். ஆகையால் வழியில் முட்செடிகளின் தழுவல்களிலிருந்து நழுவிச்செல்வது சிரமமாகத்தானிருந்தது. எனக்குக் கிடைத்த தபால் இலாகா கோஷ்டித் துணையில் தகுதியுள்ள வாலிபர்களும் உற்சாகிகளும் இருந்தார்கள். இத்தகைய இடங்களுக்கு வர இயலாத முதியவரும் — சிறுமியுமிருந்தாள். கையில் காமெரா வுடன் வந்த அன்பர்-நடுக்கோம்பை-பிராஞ்சு போஸ்டு மாஸ்டர் திரு. R. தியாகராஜன் தொடர்பு எனக்கு அருவிக் காட்சியைப் பிடித்துக்கொடுத்தது.

அருவிக்குச் செல்லும் வழியில் அடர்ந்த மரங்களிடையே நிழலில் செல்லும் போது இலைகளினிடையே புகுந்துகீழேசிதறியுள்ள கதிரவனின் ஒளித் துகள்கள் நிலாத் துண்டுகளாகவே காட்சியளித்தன. கங்கையும் யமுனையும் கலந்த தோற்றமாகவும் எள்ளும் அரிசியும் கலந்த கலவையாகவும் அதைக் கூறுவதில் எனக்கொரு ஆட்சேபணையுமில்லை. கால் நடைச் சிரமமும் எங்கோ வந்துவிட்டோமே என்ற பயமுமில்லாமல் நாளெல்லாம் இங்கேயே தங்கியிருக்கமாட்டோமா என்று எண்ணி ஏங்கவைக்கும் காட்சிகளில் மனம் லயித்தேன். எங்கெங்கோ அணை கட்டுகிறார்களே! இங்கே வடக்கிலிருந்து தெற்கு நோக்கி ஆகாச கங்கையருவி விழுகிறது. அதையொட்டிச் சரிவில் மற்றொரு சிறு அருவியும் விழுகிறது. தெற்கு, மேற்கு, கிழக்குப்புறங்களில் நெருங்கிய மலைத் தொடர்-கிழக்கே குறுக்கே அணைத்துக் கட்டினால் சுமார் மூவாயிரம் அடி உயரத்தில் ஏராளமான நீரைத் தேக்கி விடலாம். துளைபோட்டோ அல்லது வேறு வகையாகவோ அந்த நீரை வெளியே கொண்டுவந்தால் மின் விசையும் மேட்டுப் பகுதிகளுக்கு ஏராளமாகத் தண்ணீர் வசதியும் கிடைக்குமே என்று ஒரு கணம் என் இரவல் மூளையில் உதித்தது. 'சீச்சீ!... இயற்கையை ரசிக்க வந்தவன் இப்படியெல்லாம் அதிகப்பிரசங்கித்தனம் செய்யாதே!' என்று அதை அடக்கிவிட்டேன்.

முடியுமானால் மேற்புறத்திலேயே மீன் பள்ளத்துறையையொட்டி நல்ல பாதையை அமைத்து 'ஜீப்' செல்லும் வழியை அருவி வரைக்கும் கொண்டுவந்து பிறகு கீழே மின்சார 'லிப்ட்' மூலமோ அல்லது இரும்பு ஏணி அல்லது கயிற்றுவழி மூலமோ அருவி விழுமிடத்தில் இறங்க வசதி செய்யலாம்-பாதுகாப்புக் கம்பிகள் அமைத்தால் குற்றாலத்தருவியைவிடப் பன்மடங்கு இந்த அருவியைப் பயன் படுத்திக்கொள்ளலாம்,



அருவியிலிருந்து நீர்த்துளிகளை வாரிக்கொண்டுவரும் சாரலே குளித்த பயணத் தந்தாலும் அந்த அன்பர்களுடன் மீண்டும் அருவியில் குளித்து – அந்தப் பயங்கர ஆனந்தத்தை அனுபவித்தேன்.

'ஆகாச கங்கையிது–அறப்புளீசன்
குளித்துவரும் (ஆகா)
ஆகாத ஊருக் கெல்லாம்
ஓடோடி என்ன கண்டோம்?
அருகில் கொல்லி மலையருவி
ஆனந் தந்தரு மருவி (ஆகா)
முப்பத்து முக்கோடி தேவர்களும்
முனைந் திறங்கி வடித்துதவ
முக் கண்ணன் தென்னகத்து
மக்க ளுக்காய் முடியவிழ்த்தான்'' (ஆகா)

என்ற 'காபி' கிடைக்காத இடத்தில் காபி ராகத்தில் என்னுள்ளம் இசைத்து மகிழ்ந்தது.

வெல்லத்தின் சுவையை விண்டு வாயிற் போட்டாலன்றி விளங்கவைக்க இயலுமா? நேரில் கண்டால் மட்டுமே அருவியின் அழகை ரசிக்க இயலும். நேரமாகி விட்டதே என்ற பயம் ஒரு புறமும் இந்த இனிய அருவியை விட்டுப் பிரிய நேருகிறதே எனும் ஏக்கம் மறு புறமுமாக அருவியிடம் விடைபெற்று மீண்டுமறப்புளீசர் கோயில் நோக்கி மேலேறிச் சென்றோம்.

வழியில் பெரும் பாறையொன்று தலைமேல் குடை பிடித்தாற்போல் கவிந்திருக்கும் அதிசயம் கண்டேன். கூர்ந்து கவனித்ததில் அதன் விளிம்பில் ஓடிக்கொண்டிருக்கும் கனத்த மர வேரும்-கீழே சரிந்து கிடக்கும் பாறையின் பகுதியும்-வேரின் பலத்தால் கற்பாறை பிளந்த கதை கூறின.

வயிற்றைப் பசி கிள்ளக் கல்லிலும் முள்ளிலும் நடந்த கால்கள் கெஞ்ச மீண்டும் நடுப்பகலில் சுமார் ஒன்றரை மணிக்கு அறப்புளீசன் கோயிலை அடைந்தோம். குருக்கள் அவர்கள் அர்ச்சனை செய்து விபூதி பிரசாதம் வழங்கினர். அன்பர்கள் தாங்கள் கொண்டு வந்த அமுதையுண்ண மீன் பள்ளத்துறை நோக்கிச் சென்றார்கள். நான் குருக்களய்யாவின் விருந்தாளியாக அவரோடு விருந்துண்டேன்! அவர் அடக்கமாக 'ஏதோ சாதாரண – இரண்டுங்கெட்டான் – ரசம் சாம்பார்' என்று கூறினாலும் மலைமீது அந்த உணவு தேவர்கள் விழுங்கும் அமுதத்திற்கு இணையாகவே இருந்தது. இங்கே மலை மீது செல்கிறவர்கள் எடுத்துச் செல்ல வேண்டிய பொருள் பற்றிச் சிறிது சொல்வது தகுமென்று நினைக்கிறேன்.

மலைமேலிருந்தே கீழே ஏராளமாகப் பலா, வாழைப் பழங்கள் விற்பனைக்கு வருவதால் அவைகளை அங்கேயே வாங்கிக்கொள்ளலாம் என்றெண்ணி நான் ஏமாந்தேன். விளைவு வெறுங் கையுடன் நான் அங்கே செல்ல நேர்ந்தது.

மலை மேல் செல்கிறவர்கள் இந்தப்பொருளைக் கொண்டு சென்றால் அவர்களுக்கு உதவியாக இருப்பதுடன் நமக்கும் சௌகரியமாக இருக்கும்.

கோயில் வழிபாட்டுக்குச் செல்கிறவர்கள் விறகு தவிரச் சகல பொருள்களும் கொண்டு செல்லவேண்டும். அங்கே அரிசி கூட மலையரிசி எனும் ரகம்தான் கிடைக்கும்.

சாதாரண உல்லாச யாத்ரிகர்கள் மலைவாசி மக்களிடையே விநியோகித்து அவர்களிடம் கிடைப்பதைப் பெற்று மகிழ முயலலாம்.

சீமை எண்ணெய், உப்பு எண்ணெவகைகள் டீத்தூள் காபி, சர்க்கரை, வெல்லம், ரவை, மைதா, தீப்பெட்டி, பீடி, சிகரெட், சோப்பு, துணிவகை, ஸ்வீட், பிஸ்கத் வெற்றிலை சீவல் வகையரு யாவும் நாம் எடுத்துச் செல்லலாம். பால் கூட அங்கே அவ்வளவாகக் கிடைப்பதில்லை. பால் பவுடர் டின் கொண்டுபோகலாம். சமைத்து அங்கேயே சுடச் சுட உணவுப்பொருள்களைத் தயாரித்துக் கொள்ள விரும்புகிறவர்கள் சட்டிப் பானைகளை புதிதாக வாங்கிச் சென்று திரும்பும்போது அவர்களுக்கே அன்பளிப்பாக வழங்கிவிடலாம். மலைவாசி மக்கள் மண் பாண்டங்களைக் கீழிருந்தே சுமந்து செல்கிறார்கள்.

அறப்புளீஸ்வரர் கோவிலில் அழகுக் கண்ணி எனும் அம்மனுக்கு ஊஞ்சல் உத்சவம் செய்தால் உலகமெங்கும் மழை பெய்யுமாம்.

அறப்புளீஸ்வரரின் தேவியாக இலங்கும் அன்னை தாயம்மாள்.

முதலில் நான் புளியஞ்சோலை வழியாகக் கீழிறங்கி வர வேண்டுமென்றே திட்டமிட்டிருந்தேன். இறைவனின் திருவுள்ளம் வழியில் கிடைத்த தபால் இலாகா அன்பர்களுடன் மீண்டும் என்னைக் குறுக்கு வழியில் மூன்று மலைகளைக் கடக்கவும் புதியவழியில் பல ஊர்களைக் காணவும் வைத்தது.

வானத்தை நம்பி வையத்தில் வாழும் இந்த மலைவாசி மக்களின் உடலும் உள்ளமும் பெற்றுள்ள உறுதி நமக்கமைவது எளிதல்ல. குருக்கள் ஐயா அறநெறிப் பணியுடன் மக்களின் நோய்க்கு மருந்து வழங்கும் ஹோமியோபதி L.M.P. டாக்டராகவும் விளங்குகிறார். மருத்துவ வசதி இல்லாத இடத்தில் இப்படி ஒருவர் கிடைத்திருப்பது மக்களுக்குப் பெரிதும் உதவியாக இருக்கிறது.

புது வழியில் சந்திக்கும் சின்னஞ் சிறு ஊற்றுப் பெருக்கியெல்லாம் நீர் பருகி முன்னேறிவரும் நிலையில் இதோ அந்த மலைமேட்டைத் தாண்டி இறங்கி ஏறிவிட்டால் பஸ்ஸைப் பிடித்துவிடலாம் என்றார்கள். தொய்ந்து விழும் கால்களுக்குத் தெம்பூட்டி நடக்க வைக்க என்ன முயன்றும் என்னால் வெற்றிபெற முடியவில்லை. என் அன்பர்கள் என்னைப் பின் தங்கவிட விரும்பா விட்டாலும் வேறு வழியின்றி நான் பின் தங்கி விட்டேன். எனக்காக அவர்கள் சிறிது நேரம் பஸ்ஸை நிறுத்திவைத் திருந்தார்களாம். நான் போய்ச்சேர்ந்தபோது பஸ் என்னை விட்டுச் சென்று விட்டது.

# 'மால்கோ' தொழிற்சாலை

வேதமந்திரங்கள் ஒலிக்க நாதஸ்வர இசை முழங்க தமிழ் நாட்டில் தனியார் துறையில் மிகப் பெரிய தொழில் நிறுவனமாகிய சென்னை அலுமினியம் தொழிற்சாலையை பாரத ஜனாதிபதி டாக்டர் ராதா கிருஷ்ணன் 2-ம் தேதி மேட்டூரில் திறந்து வைத்தார்.

அவ்வமயம் ஜனாதிபதி அவர்கள் உரை ஆற்றுகையில் சர்க்கார் தொழில் துறை மட்டும் போதும்; அல்லது தனியார் துறைக்கே உதவ வேண்டும் என்ற கொள்கைப்பிடிவாதம் அரசாங்கத்துக்குக் கிடையாது. நாட்டின் செல்வத்தைப் பெருக்குவதே அதன் ஒரே குறிக்கோள். அதற்கு உகந்த வழி முறைகளை தான் பின்பற்றுகிறது என்று கூறினர்.

ஆக்ரமிப்புக்கு ஈடுகொடுப்பதும் உள் நாட்டில் ஆட்சிக் கவிழ்ப்பு முயற்சிகளை முறியடிப்பதும் ஒவ்வொரு நாட்டின் கடமையாகும். நமது அண்டை நாடுகளாகிய சீனாவுடனும் பாகிஸ்தானுடனும் சமரசம் ஏற்படுவதாயின், அது கண்ணியம், கௌரவம் ஆகியவை அடிப்படையில்தான் சாத்தியம் பிற இனங்களுக்குச் செலவிடுவது அவசர அவசியமாயிருக்கையில் பாதுகாப்புக்காக ரூ. 900 கோடி செலவிட்டு வருகிறோம். ஆக்கிரமிப்புக்கு ஈடு கொடுக்கும் ஆயத்த நிலையில் நாம் இருக்க இப்பெருஞ் செலவு தேவைப்படுகிறது. மக்கள் அனைவருக்கும் உணவு உறைவிடம் உடுக்க உடை கிடைக்கச் செய்து அவர்களுக்கு கல்வி வசதியும் அளிப்பதன் மூலம் ஆட்சிக் கவிழ்ப்புமுயற்சிகளைச் சமாளிக்கலாம். இந்த நோக்கம் ஈடேற வகை செய்யும் வழிகளையே சர்க்கார் கடைப்பிடிக்கும் என்கிறார் ஜனாதிபதி.

சர்க்கார் துறையும் தனியார் துறையும் ஒன்றின் உதவியின்றி மற்றொன்று இயங்கவோ செழிக்கவோ முடியாது. நாடுகளிடையே ஒத்துழைப்பு வெகுவாகப் பெருகி வரும் இந்நாளில் தொழில் துறையில் கூட்டுறவுக்கு ஓர் சிறந்த உதாரணமாக இத்தொழிற்சாலை திகழ்கிறது. பிராந்திய அல்லது கோஷ்டி நோக்குடன் இத் தொழிற்சாலை துவக்கப்படவில்லை என்று நினைப்பதாகவும், பொதுவாக நாட்டின் வளர்ச்சிக்கு உதவுமென்றும் அவர் நம்பிக்கை வெளியிட்டார்.

காங்கிரஸ் அக்ராசனர் ஸ்ரீ காமராஜ் பேசுகையில் மேலும் பல உப தொழில்கள் முளைக்கவும் ஏராளமானவருக்கு வேலை வாய்ப்பு கிட்டவும் வகை செய்யும் இப்பெரிய தொழிற்சாலையை ஸ்தாபிக்க மானேஜிங் ஏஜெண்டு ஸ்ரீ வெங்கடசாமி நாயுடு துணிவுடனும் திறனுடனும் பொறுமையுடனும் ஆற்றிய அரும் பணியைப் பாராட்டினர்.

முதலமைச்சர் ஸ்ரீ பக்த வத்சலம் பேசுகையில் ஆரம்ப கட்டத்தில் பல சோதனைகளை வெற்றிகரமாகத் தாண்டிய இத் தொழிற்சாலையின் எதிர்காலம் மகோன்னதமாயிருக்கும் என்று குறிப்பிட்டார். இங்கு உற்பத்தி பெருகப் பெருக இவ்வட்டாரத்துக்கு மட்டுமின்றி நாட்டிற்கே நன்மை பயக்குமென்றும் உரைத்தார்.

பெருகும் ஜனத்தொகை வெள்ளத்தில் தமிழ்நாடு மூழ்கி விடாதிருப்பதாயின் தொழில் அபிவிருத்தி இன்றியமையாதது என்றார் தொழில் அமைச்சர் ஸ்ரீ ஆர். வெங்கட்ராமன். இந்த வேகத்தில் தொழில்கள் வளர்ந்தால் 10 ஆண்டுகளில் இந்நாட்டில் தொழில் துறையில் தமிழ் நாடு முன்னணியில் நிற்குமென்றும் குறிப்பிட்டார். ஏற்காட்டில் கிடைக்கும் பாக்ஸைடு கனிப் பொருளைத் தவிர கொடைக்கானல் அருகில் பழனி மலை வட்டாரத்தில் 60 லட்சம் டன் உயர் ரக பாக்ஸைடு இருப்பதாக பூர்வாங்க பரிசோதனைகளிலிருந்து தெரியவருகிறது. ஆகவே இத்தொழிற்சாலை மேன்மேலும் வளர்ந்து பெருகுமென உத்தரவாதமளிக்கலாம் என்றார் தொழில் மந்திரி.



ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஏடு 30 | 4—7—1965 | வாரம் 32


# திருச்சியில் காமராஜ்

தமது பிறந்தநாளைத் திருச்சியில் கொண்டாடும் ஒரு மரபு தலைவர் காமராஜ் அவர்களுக்கு அடிக்கடி வாய்ப்பதுண்டு. இவ்வாண்டில் அவரது 63-வது பிறந்தநாளை பெரும் சிறப்புடன் கொண்டாடுகிறது திருச்சி நகரம். இதைப் பின்பற்றி மாவட்டங்கள் ஒவ்வொன்றும் தக்க முறையில் காமராஜ் பிறந்த நாளைக் கொண்டாடுகின்றன. எனவே தமிழகம் முழுவதும் தலைவரின் 63-வது பிறந்த நாளை என்றுமில்லாத பெரிய அளவில் கொண்டாடுகிறது.

தமது வாழ்வும் பயனும் தாய் நாட்டுக்குப் பணி புரிவதேயன்றி வேறென்றுமறியாத ஒரு பெரும் தலைவருக்குப் பிறந்தநாள் கொண்டாடுவது என்பது, அந்தத் தலைவர் எந்த மகாலட்சியத்துக்காக உழைக்கின்றாரோ அந்த லட்சியத்தை உணர்ந்து பின்பற்றுவதுதான். அடிமைப்பட்டிருந்த பாரதம் அன்னியப் பிடியிலிருந்து விடுபட்டுத் தனக்கென்று ஒரு புதிய வழி வகுத்து முன்னேறுகிறது. ஜனநாயக சமதர்மம் என்ற குறிக்கோள் ஒன்றுதான் தலைவர் காமராஜரின் உயிர்மூச்சு. பண்டித நேருவுக்குப் பின்னர் பேராண்மையுடன் தேசிய இயக்கத்துக்குத் தலைமைதாங்கி நடத்தும் காமராஜ் தமது வாழ் நாளிலேயே இந்த நாடு ஜனநாயகத்தையும் சமதர்மத்தையும் அடைந்தாக வேண்டுமென்ற ஊக்கம் கொண்டிருக்கிறார். அதன் பொருட்டு காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பில் நீடிக்க வேண்டியது அவசிய மென்பதையும் எண்ணிப் பாடுபட்டு வருகிறார். அவருடைய பிறந்த நாள் என்பது உண்மையில் ஜனநாயக சமதர்ம லட்சியத்திற்கு நாம் எடுக்கும் திருவிழாவாகத்தான் இருக்க முடியும்.

தலைவரின் பிறந்த நாளைக் கொண்டாடுவதன் மூலம் அகில இந்தியாவிலும் அவருக்கு இணையான தலைவர் பிறர் எவருமில்லை என்ற உண்மையை நாம் நிலை நாட்டுகின்றோம். அவருக்குத் தமிழகம் எத்தகைய மதிப்பைக் காட்டுகிறது. எப்படிப் பலம் தருகிறது என்பதை பாரதம் முழுமையும் உணரும்படி செய்வதுதான் தேசிய உலகிலும் அரசியல் அமைப்பிலும் நாம் சிறந்த முன்னேற்றங்கள் பெறச் செய்யும் சூழ்நிலை. காமராஜரின் வலிமை தமிழகத்தின்வலிமை,ஏழைமக்களின் வலிமை,ஜனநாயகத்தின் வலிமை, சமதர்மத்தின் வலிமை. எனவே அது பாரத நாட்டின் வலிமையாகவும் காங்கிரசின் வலிமையாகவும் அமைகிறது. உலக அரசியலில் பாரதம் அடைகின்ற முதலிடம் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் வலிமையில் அடங்கியிருக்கிறது.

இதை உணர்ந்து தலைவரின் பிறந்தநாளைக் கொண்டாடியும், வரவிருக்கும் பொதுத் தேர்தலுக்குமுன் அவருடைய கரங்களைப் பெரிதும் உறுதிபடுத்தவும் இந்தப் பிறந்தநாள் விழாவைக் கொண்டாடுவது தக்க வழி என்று கூறி அதை அனைவரும் ஏற்றுக் கொண்டு போட்டி போட்டுப் பின்பற்றுமாறு செய்துள்ள தனிச்சிறப்பு தலைவர் டி. எஸ். அருணாசலத்திற்கு உரியது. திருச்சியில் அவருடைய ஆலோசனைப்படி விழா சிறப்பாக நடைபெறவிருக்கிறது.

நாட்டு முன்னேற்றம் பற்றிய கருத்தரங்கு, கவியரங்கு விளையாட்டுப் போட்டிகள், ஊர்வலங்கள், பொதுக்கூட்டம் ஆகிய ஏற்பாடுகள் மிகவும் பரந்த அளவில் நடைபெற்று வருகின்றன. சிறப்பு மலர் தயாராகி வருகிறது. தேசிய வரலாற்றில் திருச்சி மாவட்டத்தின் பங்கு பற்றிய குறிப்புக்களும் படங்களும் மலரின் சிறப்பான அம்சங்கள்.

திரு. ஆர். கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களைத் தலைவராகக் கொண்ட விழாக்கமிட்டி இரவுபகலாக தமிழ்ச் சங்கக் கட்டிடத்தில் தனது அலுவலகத்தை அமைத்துக் கொண்டு விழாச் சிறப்புக்கான ஏற்பாடுகளில் கண்ணுங் கருத்துமாக வேலை செய்து கொண்டிருக்கிறது. எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்ற பொதுத் தலைப்பில் பத்துக் கவிஞர்கள் பங்கு பெற்றுப் பாடுகின்றனர். ஜனநாயக சமதர்மம் பற்றிய கருத்தரங்கில் நாட்டின் பேரறிஞர்கள் பேராசிரியர்கள், வணிகர்கள் போன்றபல்துறையாளரும் பங்குபெறுகின்றனர்.

விழாவின் சிறப்பு அரசியல் அரங்கில் நமது வலிமைக்கு அடிப்படையாக அமையவேண்டும். அப்படி அமையுமென்று நம்புகிறோம்.

# கண்ணோட்டம்

— ரா. நா.

பிரதமர் சாஸ்திரி கானடா விஜயத்திற்குப்பிறகு லண்டனில் காமன்வெல்த் பிரதமர்கள் மகாநாட்டிற்குச் சென்று விட்டுத் தாயகம் திரும்பி விட்டார். இந்த விஜயத்தின் மூலம் அவருடைய மதிப்பு மேலும் உயர்ந்து விட்டது. ஆப்பிரிக்கத் தலைவர்கள் பெரிதும் அவரது யோசனையை நாடினார்கள் என்று கூறப்படுகிறது. குறிப்பாக அல்ஜீரியாவில் கூட விருந்த ஆப்பிரிக்க ஆசிய நாடுகள் மகாநாடு ஒத்திவைக்கப்பட்டதில் பெரிதும் இந்தியாவின் முயற்சிதான் தூண்டு கோலாயிருந்தது என்று எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். அல்ஜீரியாவில் நடந்த புரட்சி இன்னும் நிலையான வெற்றிபெறவில்லை ஆகையினாலும், அல்ஜியர்ஸில் இன்னமும் கலக சூழ்நிலை நிலவுவதாலும் ஆப்பிரிக்க ஆசிய மகாநாட்டை ஒத்திவைக்க வேண்டும் என இந்தியா வற்புறுத்தியது. சீனாவும் பாகிஸ்தானும் மகாநாடு நடந்தேஆகவேண்டுமென எவ்வளவோ வாதாடியும் பெருவாரியான ஆப்பிரிக்க நாடுகள் ஒத்திவைப்பை ஏற்றுக்கொண்டது இந்தியாவுக்கு வெற்றி என்பதில் சந்தேகமில்லை.

மேலும் கட்ச் தகராறில் சமரசம் ஏற்பட்டு உடன்பாடு தயாராகிறது என்பதும் சாஸ்திரி அவர்களின் ராஜதந்திர சாமர்த்தியத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு. கடைசி நிமிஷத்தில் பாகிஸ்தான் தடம் புரண்டுசெல்லலாம். ஆனால் நமது உரிமைகளை விட்டுக் கொடுக்கப் போவதில்லை என்பதில்சாஸ்திரி உறுதியாயுள்ளார். ஆகையால் சாஸ்திரியாரின் மதிப்பு மேலை நாடுகளில் உயர்ந்துவருவது பற்றி ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஃ ஃ ஃ

அல்ஜீரியாவில் பென் பெல்லாவை வீழ்த்திவிட்டு, ஒரு ராணுவக் குழு அதிகாரத்தைக் கைப்பற்றியது பற்றி சென்னை ஆங்கில வார இதழ் 'பிரீ இந்தியா' - வின் டில்லி நிருபர் விமர்சனம் செய்திருப்பது ரஸமாயிருக்கிறது.

அல்ஜீரியாவில் நிகழ்ந்த புரட்சி எந்த அயல் நாட்டினரும் தூண்டிவிட்டதல்ல என்று கூறிவிட்டு அந்நிருபர் எழுதுகிறார்:

'பென்பெல்லாவின் வீழ்ச்சிக்கு முக்கிய காரணம் அவர் தம்மை சர்வாதிகாரியாக ஸ்தாபித்துக்கொள்ள முயன்று வருகிறார் என்று மக்கள் நினைக்கத் தலைப்பட்டதுதான்.

'ஆனால் என் சிந்தனை வேறு வழியில் அமைந்தது. நான் இந்தியாவின் மகத்தான ஜனநாயகப் பண்பாடுகள்பற்றியும், காந்தியடிகளின் விடுதலை இயக்கத்தின் போதும் சுதந்திரம் பெற்ற 17 ஆண்டுகளில் ஜவஹர்லால் நேருவின் தலைமையிலும் அந்தப் பண்பாடுகள் பலமடைந்ததுபற்றியும் சிந்தித்தேன். ஐக்கிய அரபு நாட்டுத் தலைவர் நாசர் உள்பட வெளிநாட்டுத் தலைவர்கள் தங்கள் நிலையைப் பலப்படுத்திக் கொண்டதுபோலல்லாமல் பாமர மக்களின் நலனுக்காகத் தன் செல்வாக்கை ஜவஹர்லால் நேரு பயன்படுத்தியதை ஆழ்ந்த நன்றியுணர்ச்சியுடன் நினைவுபடுத்திக் கொண்டேன். இதுமட்டுமல்ல. சமுதாயத்தின் பல்வேறு பகுதியினரின் பெருவாரியான ஆதரவைப் பெறுவதற்காக பல்வேறு சமரசங்களைச் செய்ததுடன் பல சோஷலிஸ திட்டங்களை அமுல்செய்வதை ஒத்திப் போட்டார். எல்லோருடைய சம்மதத்துடன் நிதானமாக முன்னேறுவது தீவிர திட்டங்களை உடனடியாக அமுல் செய்வதை விடச் சிறந்தது என்பதை உணர்ந்தார். தீவிர திட்டங்களை அவசரமாக அமுல் செய்தால் பொதுமக்களின் பாராட்டுதலைப் பெறலாம் ஆனால் அப்படிச் செய்தால் ஜனநாயகமரபு சீர்குலைந்து, தேசிய முன்னேற்றமே நாளடைவில் பாழ்பட்டு விடும்'.

நம் ஜவஹர்லால் நேருவின் பெருமை வெளிநாட்டுப் புரட்சிகள்மூலம் நிரூபணமாகிறது. ஜவஹரின் வழியையே பின்பற்றும் நம் சாஸ்திரியும் நற்பெயர் பெற்றுவிட்டார். இந்த உண்மையை நம் மக்கள் அறிந்து காங்கிரஸ் ஆட்சியை ஆதரிக்கவேண்டும்.

ஃ ஃ ஃ

சென்னை மேயர் சிட்டிபாபு பெல்கிரேடில் நடந்த உலக ஸ்தலஸ்தாபன மகாநாட்டிற்குச் சென்றுவிட்டு, பின்னர் பல்வேறு நாடுகளுக்கும் சென்றுவிட்டுத் திரும்பிவிட்டார். திரும்பி வந்ததும் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் நம் நாடு திட்டமிட்ட பொருளாதார வழியைப் பின்பற்றி நன்கு முன்னேறி வந்திருக்கிறது என்றும் அடுத்த 4வது திட்டத்தின்கீழ் மேலும் முன்னேறும் என்றும் கூறியதாக அறிவித்தார். வெளிநாடுகளில் நம் நாட்டின் சிறப்பை மட்டும் எடுத்துக் கூறிய அவரது பண்பாடு பாராட்டுதற்குரியது. ஆனால் அங்கே தம்மை தி. மு. க. - வின் உறுப்பினர் என்று ஏன் அறிமுகப்படுத்திக்கொண்டார் என்பது தான் விளங்கவில்லை. காங்கிரஸ் ஆட்சியில் பொருளாதாரத் துறையில் நம்நாடு முன்னேறுகிறது என்பதை இவர் ஒப்புக்கொண்டால் தி. மு. க.-விற்கு அவசியமே இல்லை. மேலும் இவர் தி. மு. க.-பற்றிக் குறிப்பிட்டதால் அயல்நாட்டினர் இது என்ன கட்சி என்று ஆராய முற்படுவர். உண்மை அறிந்தால் இந்த ஸ்தாபனத்தைப்பற்றி எள்ளி நகையாடுவர்.

# 3,000-ம் ஆண்டில் காதலுக்கு இடமுண்டா?

——

1965 ஆம் ஆண்டில் நாம் கற்போது வாழ்கிறோம். 3000 ஆம் ஆண்டில் நாம் இருப்பதாக கற்பனை செய்து கொண்டால் எப்படி இருக்கும்? இந்தக் கற்பனையின் அடிப்படையில் மேற்கு ஜெர்மனியில் 'டெலிவிஷன் படம் ஒன்று உருவாகிறது. ஏழு பாகங்கள் கொண்ட இந்த கற்பனைப் படத்தைப் பார்ப்போருக்கு மெய்சிலிர்க்கும் என்பது உண்மை.

42 லட்சம் ரூபாய் செலவில், மூனிச் அருகே, வானவெளிக் கப்பல் ஓரியனின் விசித்திர அனுபவங்கள்,என்ற தலைப்பில் இந்த டெலிவிஷன் திரைப்படம் தயாரிக்கப்படுகிறது.

இதற்காக பிரமாண்டமான அளவில் மாதிரி வான வெளிக் கப்பல் ஒன்று தயாரிக்கப் பட்டிருக்கிறது. 450 அடி குறுக்களவும், 96 அடி உயரமும் உள்ள இந்த வானவெளி கப்பலில் உட்புறக் காட்சிகள் படமாக்கப் படுகின்றன.

இதோ ஒருகாட்சி. 'ஓரியன்'வானவெளிக் கப்பலின் உட்புறத்தில் வட்டவடிவ, 'இயந்திரமனிதர்கள்'அங்கு மிங்கும் மும்முரமாக நடமாடுகின்றனர். எங்குபார்த்தாலும் உலோகத் தடுப்புச் சுவர்கள். எண்ணற்ற கருவிகள் மினுமினுக்- என்கின்றன. உடலோடு ஒட்டிய பிளாஸ்டிக் ஆடை அணிந்த அழகிகள், பிளாஸ்டிக் நாற்காலிகளில் அமர்ந்து அரட்டை அடித்துக்கொண்டிருக்கின்றனர். சிலர் வான வெளி இசைக்கு ஏற்ப நடனமாடுகின்றனர். திடீரென்று வான வெளிக் கப்பலில் உள்ள வீரர்கள்,பயங்கர பள்ளத்தாக்கு ஒன்றை காண்கின்றனர்; ஜெல்வி மீன், போன்ற வடிவத்தில் மனிதர்கள் வாழுகிறார்கள்.

இந்த பயங்கர கற்பனைப் படத்திற்கான தந்திரக் காட்சிகளை உருவாக்க, சுமார் 30 பேர்,பல வாரங்களாக வேலை செய்தார்கள். மீன் கண்காட்சி சாலையில் கண்ணாடிப் பெட்டிக்குள் இருக்கும் சின்னஞ்சிறிய மீனைப் படம் பிடித்து, காமிரா தந்திரத்தினால் அதைப்பயங்கரசுறாமீனாகக் காட்டுகிறார்கள். மற்ற கோளங்களில் காணப்படும் வெடிப்புகளை, பஞ்சு ரப்பரினால் உருவாக்கியுள்ளனர். ஆனால் எல்லாக் காட்சிகளையும்' இதே சூழ்நிலையில் படமெடுக்க முடியாது என்பதால், ஐஸ்லாந்து தீவுக்கும் தீவுக்கும் காமிராவுடன் சென்று பனிமலை சூழ்ந்த இடங்களிலும் படமெடுக்கத் திட்டமிட்டுள்ளனர். மேற்கு ஜெர்மன் அணுசக்தி விஞ்ஞானி ஒருவரை,அவசியமான யோசனைகளைக்கூற, ஆலோசகராக அமர்த்தியுள்ளனர் டெலிவிஷன் டைரக்டர்கள். (யூ பி.எஸ்)

——

முதல் பாகம் ]   [ வீடு முதல் பள்ளி



# உத்தமன் முத்து

திருச்சி பாரதன்

### 9. அன்னை புத்திமதி

புத்த கப்பை தூக்கி நின்றான்
போய் வருவாய் கண்ணு!
பொறுமை யோடு சாலை மீதில்
நடக்க வேண்டும் என்றும்!
எத்த னைதான் அவச ரமாய்
இருந்த போதும் நீயே
இடக்கைப் பக்கம் போக வேண்டும்
என்ப தைமற வாதே!

புத்தி சொன்ன அன்னை உணவுப்
பொட்ட லத்தைத் கொடுத்தாள்!
புதிய முத்தம் மீண்டும் கொடுத்து
வழிய னுப்பி வைத்தாள்!
முத்து துள்ளிக் குதித்தான் சிறிய
முயலின் குட்டி போலே!
முகம லர்ந்து வணக்கங் கூறி
நடந்தான் சாலை மேலே!

### 10. சேர்ந்து செல்வேன் !

இறைவா! என்றன் செல்வன் என்றும்
இனிது வாழ வேண்டும்!
எவரும் போற்றும் உத்த மனாய்
ஏற்றம் பெறவே வேண்டும்!
நிறைந்த கல்வி கற்று உலகில்
நிறைகு டம்போல் சேவை
நிலையாய்ச் செய்ய வேண்டும் என்று
நெஞ்சம் பணிந்தா ளன்னை!

'முத்து முத்து!' அழைக்கும் குரலை
முத்து கேட்டு நின்றான்!
மிகவும் வேக மாக 'ஸ்கூட்டர்'
மீதில் அப்பா வந்தார்!
முத்து! ஏறிக் கொள் நீ!' என்றார்
'வேண்டாம் அப்பா வேண்டாம்
மூன்றும் வீட்டு பாலு வருவான்
சேர்ந்து செல்வேன்!' என்றான்!

### 11. அணைப்பில் இன்பம்

சிரித்துக் கொண்டே விடைகொ டுத்து
சென்றார் அப்பா! சிறிய
சிட்டுக் குருவி படம்நி றைந்த
சட்டை போட்ட முத்து
விரைந்து சென்றான் பாலு வசிக்கும்
வீட்டி னுள்ளே நுழைந்தான்!
விரும்பும் பாலு ஓடி வந்து
அவனை அணைத்துக் கொண்டான்!

அன்பு நண்பன் அணைப்பில் முத்து
ஆனந் தத்தைக் கண்டான்
அடடா! அந்தக் காட்சி தந்த
இன்பம் என்னே! என்னே!
ஒன்றாய்க் கூடி பள்ளி நோக்கி
உண்மை நண்பர் கிளம்பினர்
ஓட்டம் நடையும் கலந்து கலந்து
உற்சா கத்தில் கிளம்பினர்!

### 12. பரபரப்பு

சாலை நடுவினிலே — கார்கள்
சர்ரெனப் பாய்ந்தனவே!
நாலு புறத்தினிலும் — கூச்சல்
நடுங்கிட வைத்தனவே!

போட்டியில் செல்பவர்போல் — மனிதர்
பொறுமை இழந்ததுபோல்
ஓட்டமாய் ஓடுகின்றார் — அதுவும்
ஒப்பிலா காட்சியன்றோ?

அந்தப் பரபரப்பில் — முத்து
அமைதி உடையவனாய்
சிந்தை தெளிந்தவனாய் — பள்ளி
சென்றனன் நண்பனுடன்!

சின்னஞ் சிறுவிழிகள் — சாலை
செயல்களில் வியந்திருக்கும்!
ஒன்றிரு கணத்திலே — அவ்விடம்
ஓலமும் கேட்டதம்மா!

### 13. ரத்த வெள்ளம்

வயதில் முதிர்ந்தவராம் — உலக
வாழ்வில் தளர்ந்தவராம்!
உயர்ந்த ஒருகிழவர் — மீது
ஒருவண்டி மோதியதே!

தலையில் பெருங்காயம் — ரத்தம்
தரையில் பிரவாகம்!
நினைவு இழந்தனரே — தரையில்
நீண்டு கிடந்தனரே!

'குய்யோ முறை'யெனவே — பெரிய
கூட்டம் திரண்டதுவே!
மெய்யாய் உதவிடவே — தூய
மனத்தினர் யாருமில்லை!

நாடகக் காட்சியைப்போல் — கிழவர்
நடுங்கித் துடிப்பதனை
ஆவலாய்ப் பார்த்தனரே — இரக்கம்
அன்பினைக் கண்டறியார்!

### 14. திருந்துவது எப்போது ?

அப்பெரும் கூட்டமதில் — முத்து
அவசர மாய்நுழைந்தான்!
எப்படி அவர்விழுந்தார்—காரணம்
என்னவென் றேயறிந்தான்

வாழைப் பழத்தோலை — யாரோ
வீசி எறிந்ததனால்
காலை அதில்வைத்தே — கிழவர்
கண்டார் விபத்தினையே!

உண்ணும் பழத்தோலை — சாலை
ஓரமாய் விட்டெறிந்தால்
என்ன குறைந்துவிடும்? — நாமே
என்று திருந்திடுவோம்?

எண்ணித் துயரடைந்தான் — முத்து
எட்டி நடைநடந்தான்!
கண்ணை இமைப்பதற்குள் — ஓட்டல்
கடையை அடைந்துவிட்டன்!

### 15. உயிர் பிழைத்தது !

ஓட்டல் முதலாளி — மனமே
உருகிட நிலையுரைத்தான்!
நீட்டிய 'போன்'பிடித்தே — மருத்துவ
நிலயத்தின் எண்ணுரைத்தான்!

கிழவர் விழுந்ததுவும் — மயங்கி
கீழே கிடப்பதுவும்
அழிவு நெருங்குவதுவும் — உதவி
அவசரம் என்பதுவும்

சொல்லி முடித்துவிட்டான் — முகத்தின்
சோகம் துடைத்துவிட்டான்!
துள்ளியே வந்ததம்மா — ஒருகார்
தூரம் தெரிந்ததம்மா!

கிழவரை ஏற்றியது — வேகமாய்க்
கிளம்பி மறைந்ததது!
அழகுடன் முத்துசெய்த — தொண்டு
அவருயிர் காத்ததம்மா!

### 16. புத்தி வந்தது !

மீண்டும் நடந்தனனே — பாலுவின்
மென்கரம் பற்றியவன்
தாண்டிக் குதித்தபடி — சாலையில்
சடுதியில் சென்றனனே!

மறதியின் காரணத்தால் — செருப்பு
மாட்டிட வில்லையவன்!
உறுதியாய் நின்றதொரு — ஆணி
ஓர்விரல் தைத்ததம்மா!

'அய்யகோ! வலிதாளேன் — செருப்பின்
அவசியம் நானுணர்ந்தேன்!
மெய்ஒரு பாடந்தன்னை — அறிந்தேன்
மேன்மையாய் கடைபிடிப்பேன்!'

வேகம் குறைந்ததம்மா — முத்து
வேதனை தானடைந்தான்!
ஆகா! பள்ளியதோ — வந்தது!
அவன்துயர் ஓடியது!

# தமிழ் ஆட்சிமொழி

தமிழ் வளர்ச்சி டைரக்டர் என்ற பதவியை ஏற்படுத்தி அதற்கு உயர்தர அதிகாரி ஒருவரை நியமிக்க அரசாங்கம் முடிவு செய்திருப்பதாக அமைச்சர் ஸ்ரீ எர். பத்தவத்சலம் செய்தி நிருபர் களிடம் கூறினர். இவர் தமிழ்வளர்ச்சி தமிழ் ஆட்சி மொழி அமுலைத் துரிதப்படுத்துவது புத்தகங்கள் வெளியிடுதல் போன்ற பலதுறைகளையும் கவனித்து வருவார்.

முதலமைச்சர் சொன்னார்: தமிழ்ப் புத்தகங்கள் பிரசுர வேலையை இப்பொழுது ஒரு தனிப் பிரிவு சவனித்து வருகிறது. இன்னும் அதிகமாகப் புத்தகங்களை வெளியிட வேண்டும். அயல் நாடுகளிலிருந்து வரும் நூல்களையும் மொழி பெயர்க்க வேண்டியிருக்கிறது. நிர்வாகத் துறையிலும், சட்டத் துறையில் சொல்லாக்கம் தேவையாக இருக்கிறது. இதிலும் ஓரளவு வேலை நடந்து வருகிறது. இதையும் துரிதப் படுத்த வேண்டும்.

தமிழ்நாட்டில் மொழிக் கமிஷன் ஒன்று இருக்கிறது. தமிழை ஆட்சிமொழியாக்கும் வேலையையும் துரிதப் படுத்தவேண்டும். மசோதாக்களையும் தமிழில் பிரிசுரிக்க வேண்டும்.

தமிழ்நாட்டில் சர்வீஸ் கமிஷன் பரீட்சைகள் சில தமிழில் நடக்கின்றன. ஆங்கிலத்துடன் தமிழிலும் எல்லாப் பரீட்சைகளையும் எழுதுவதற்கான திட்டம் தயாரித்து அதையும் ஒவ்வொரு கட்டமாக அமுலாக்க வேண்டும். தமிழில் எழுதினாலும் ஆங்கிலத்திலும் சில பேப்பர்கள் கட்டாயமாக எழுதவேண்டும். இதைப் பற்றி எல்லாம் சர்விஸ் கமிஷன் தலைவருடன் பேசியிருக்கிறேன். இத்திட்டத்தையும் அமுலாக்கவேண்டும்.

மும்மொழித் திட்ட அமுலையும் கவனிக்கவேண்டும். மொழி பெயர்ப்பு வேலையும் பொதுவாக இருக்கிறது.

இந்த எல்லா வேலைகளையும் கவனித்துத் துரிதப் படுத்தவும் துரித நடவடிக்கை எடுக்கவும் ஒரு அதிகாரியை நியமிக்கிறோம். கல்வி, பொது சுகாதார இலாக்காவில் இந்த அதிகாரி பணியாற்றுவார்.

# காட்டுவள ஆராய்ச்சி நிலையம்

உத்தரப் பிரதேசத்தில் டேராடூன் நகருக்கு ஐந்து மைலுக்கு மேற்கே காட்டுவள ஆராய்ச்சி நிலையம் ஒன்று இருக்கிறது. உலகத்திலேயே இதற்கு ஒப்பான இத்தகைய நிலையங்கள் மிகச் சிலவே. இங்கு நடக்கும் ஆராய்ச்சிகள் நூற்றுக்கணக்கானவை. இவை இந்தியாவுக்கு மட்டுமல்ல, உலகம் முழுவதற்குமே நன்மை அளிப்பவையாகும்.

உலகிலுள்ள காட்டுவள ஆராய்ச்சி நிலையங்களிலெல்லாம் மிகப் பெரியது இதுவே. இதைவிடப் பெரிது இதன் ஆராய்ச்சி வேலை. தொழில்களிலும் வீடுகளிலும் மரங்களுக்குப் புதுப் புதுப் பயன்களைக் கண்டுபிடித்துக் காட்டி வருகிறார்கள் இங்கு பணி புரியும் விஞ்ஞானிகள். இந்தியாவின் காட்டுவளம் குறைந்து வருகிறது. அதைக் கவனிக்காமல் விட்டால் ஆபத்து. காட்டு வளங்களைப் பேணி வளர்க்கவும் சேதப்படுத்தாமல் கையாளவும் வழி வகை காட்டி உதவியுள்ளனர் டேராடூன் விஞ்ஞானிகள். உலகத்தில் இந்நிலையத்தின் பெயர் முன்னணியில் விளங்கக் காரணம் இதன் ஆராய்ச்சிச் சிறப்பேயாகும்.

டேராடூன் நிலையம் நிறுவப்பட்டது 1878-ல்; அப்போது அதற்கு பெயர் காட்டுவளப் பள்ளி என்பது தான். அதன் நோக்கம் காட்டு ரேஞ்சர்களுக்குப் பயிற்சி யளிப்பதே. பின்புதான் அது காட்டுவள ஆராய்ச்சி நிலையமாக மாறியது. அதன் பின்புதான் அதன் பெயர் பரவலாயிற்று.

அதிலும் சென்ற ஐம்பது ஆண்டுகளில் தான் உலகப் புகழ் வந்து கூடிற்று. கரையான்கள், காளான்கள் பற்றிய ஆராய்ச்சியில் இந் நிலையத்தை மிஞ்சக் கூடிய நிலையம் உலகில் எங்கும் இல்லை. அமெரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய அநேக நாடுகள் டேராடூன் நிலைய ஆராய்ச்சியால் பயனடைந்துள்ளன. இந் நிலையம் இந்திய நாட்டின் 78 கோடி ஏக்கர் காடுகளையும் கண்காணித்து வளர்க்க வேண்டும். இந்நாட்டின் மர வகைகளை இன்னும் சிறந்த முறையில் பயன்படுத்தும் வழி துறைகளை ஆராய்ந்து காணவும் வேண்டும்; அப்படியென்றால் இதன் தனிச் சிறப்பை ஒருவாறு ஊகித்து அறிந்து கொள்ளலாம்.

டேராடூன் காட்டுவள ஆராய்ச்சி நிலையத்தின் முக்கிய கட்டடம் கண்ணைக் கவரும் வனப்பு மிக்கது; அதைச் சுற்றிலும் உள்ள நிலம் அழகாகச் செப்பனிடப் பட்டுள்ளது. அங்கு ஆராய்ச்சிக்கு வேண்டிய மரங்கள் காடாக வளர்க்கப்படுகின்றன அக்கட்டடம் இருக்கும் இடம் 1,300 ஏக்கர் பரப்புடையது. கட்டடம் 1920 வாக்கில் கட்டப்பெற்றதாகும். அதன் நீளம் 350 கெஜம். கட்டடம் மட்டுமே ஏழு ஏக்கர் நிலத்தை அடைத்துக் கொண்டுள்ளது. அங்கே பல அலுவலகங்களும், ஆய்வுக் கூடங்களும், பல அரும் பொருட்களஞ்சியங்களும், சுவர்களுக்குக்கெல்லாம் பலகை வேய்ந்த அருமையான நூலகம் ஒன்றும் உள்ளன.

நாடு வாழக் காடு வேண்டும். நாகரிக வாழ்க்கைக்கு மரம் இன்றியமையாதது. உலகமெல்லாம் இது உண்மை. ஏருக்கும், எதிரியை விரட்டும் துப்பாக்கிக்கும், சிறிய கருவிகளின் கைப்பிடிகளுக்கும், பெரிய இருப்புப் பாதையின் குறுக்குக் கட்டைகளுக்கும், தீக்குச்சிக்கும் கப்பலின் கொடிக்கம்பங்களுக்கும் எனப் பலப்பல காரியங்களுக்கு மரம் தேவை.

பழங்காலத்தில் இந்தியாவின் பெரும் பகுதியும் காடுகள் அடர்ந்திருந்தன. ஆனால் காலப்போக்கில் மக்கள், காடுகளை அழித்துக் கழனிகளும் மாடமாளிகைகளும் ஆக்கியுள்ளனர். அறுகுபோல் வேரூன்றி அழியாத மரங்களேயானாலும் இதற்குள் பெரு நஷ்டம் ஏற்பட்டிருக்கும். ஆனால், மனிதனால் மட்டுமல்ல மரங்களுக்குக்கேடு; பல பூச்சிகளும் மரங்களுக்கு எதிரிகளாயுள்ளன. காளான்களாலும் வண்டு முதலிய பூச்சிகளாலும் தாக்கப்படாத மரங்கள் சிலவே. மரத்தை அரித்துத் தின்னும் கரையான்கள் உலகம் முழுவதிலுமாக 1,900 வகைகள் இருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இவற்றில் 175 வகைகள் இந்தியாவில் இருக்கின்றன. மரத்தைக் கெடுக்கும் காளான் வகைகளோ இந்தியாவில் ஆயிரத்துக்கு மேல் உள்ளன.

இந்த இயற்கை எதிரிகளாலும் மனிதனின் கோடரியாலும் இந்தியாவின் காடுகள் குறைந்து குறைந்து இன்று நாட்டின் பரப்பில் கால்வாசிக்கும் குறைவான இடத்தில் தான் இருக்கின்றன. 'இந்தியா போன்ற இவ்வளவு பெரிய ஒரு வளரும் நாட்டுக்கு இது போதாது' என்கிறார் டேராடூன் காட்டுவள ஆராய்ச்சி நிலையத்தின் முன்னாள் தலைவர் எம். ஏ. ரஹ்மான். 'மொத்த உலகிலும் தலைக்கு சராசரி நாலு ஏக்கர் தான் விழுகிறது என்று அவர் சுட்டிக்காட்டுகிறார். ஆகையால், "காடுகளைக் காக்கவும் வளர்க்கவும் என்ன செய்யலாம் என்ற பிரச்னையை இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டங்கள் கவனிக்கின்றன; இதற்கு நட்பு நாடுகள் உதவி புரிகின்றன. வறிதே கிடக்கும் நிலங்களில் புதிதாய் மரங்கள் வைத்துக் காடு வளர்க்கப்படுகிறது. இந்தியக் காட்டுவள அதிகாரிகளுக்குப் புதிய முறைகள் கற்றுக்கொடுக்கப்படுகின்றன. காட்டுவள ஆராய்ச்சி விரிவாக நடைபெறுகிறது. இந்தியாவின் காட்டுவளத்துக்கு உயிரூட்டும் இப்பணியைச் செய்வது டேராடூனிலுள்ள காட்டுவள ஆராய்ச்சி நிலையமாகும்' என்கிறார் ரஹ்மான்.

1960-ல் இந்தியக் காடுகளிலிருந்து கிடைத்த மரங்களின் மொத்த அளவு ஏறக்குறைய 1.78 கோடி கன மீட்டர்களாகும். 1975-ல் 20 கோடி கன மீட்டர் மரம் நாட்டுக்குத் தேவை என்பது கணக்கு. தரக்குறைவான மரங்களை பயன்படுத்த வழி கண்டாலன்றி, பூச்சிகள் முதலியவற்றால் காடுகள் அழிவதைத் தடுத்தாலன்றி, அவ்வளவு தேவைக்கும் நமது நாட்டுக்காடுகள் ஈடுகொடுக்க இயலாது.

காளானும் வண்டும் கரையானும் போல் மரத்தை அழிக்கும் இயற்கை எதிரிகள் வேறு இல்லை. கட்டடங்களில் உள்ள மரங்கள், வேலிக் கட்டைகள், தந்திக் கம்பிகள் இவற்றுக்குக் கரையான்கள் செய்யும் கேடு மட்டும், கணக்கெடுத்தால், ஆண்டுக்குப் பல கோடி ரூபாய்க்கு ஈடாகும் என்கிறார் டாக்டர் பி. கே. சென்-சர்மா; டேராடூன் நிலையத்துப் பெரிய ஆராய்ச்சி அதிகாரி.



டாக்டர் ஒய். என். பூரி (இடப்புறம்), சுஜான் சிங் இருவரும் தங்கள் அலுவலகத்திலிருந்து ஆய்வுக் கூடத்துக்குப் போகும் கிட்டத்தட்ட ஒரு மைல் நீளத்துக்கும் இத்தகைய நிழல் தரு நடைபாதைகள் இருக்கின்றன.

கரையான்களால் நேரக் கூடிய அழிவு பெரிதாகையால், டேராடூன் நிலையம் கரையான் ஆராய்ச்சி ஒன்றைத் தொடங்கியுள்ளது. கரையான்களைத் தடுப்பதற்குரிய வழி வகைகளைக் காண்பதே இதன் நோக்கம். ஆய்வுக் கூடத்தில் கரையான்களைத் சோதிக்கும் முதல் ஆராய்ச்சி நிலையம் இந்தியாவில் இதுதான்.

'இயற்கையாகவே சில மரங்களுக்குக் கரையான்களை எதிர்க்கும் ஆற்றல் இருப்பது நமக்குத் தெரியும். எனவே, வியாபார முறையில் சிறப்பாக விளங்கும் இந்திய மரவகைகளையும் அந்நிய மரவகைகளையும் ஆராய்ந்து அவற்றுக்குக் கரையானை எதிர்க்கும் ஆற்றல் எவ்வளவு உண்டு என்று ஆய்வுக்கூட முறைகளைப் பயன்படுத்தி விரைவாக மதிப்பிட முடிந்தால் நல்லது என்று கருதினோம். இதன் பயனாக, மரங்களை வகையறிந்து பயன்படுத்த வழி உண்டாகும்' என்கிறார் டாக்டர் சென்-சர்மா.

இந்த ஆராய்ச்சிக்கு இவருக்குத் தலைமையாயிருப்பவர் டாக்டர் பி. என். சாட்டர்ஜி; காட்டுப் பூச்சியியல் விஞ்ஞானிகளில் புகழ்பெற்ற ஒருவர் இவர். கரையானை எதிர்க்கும் மரத்தின் ஆற்றல் பற்றிய இந்த ஆராய்ச்சித் திட்டம் 1963-ல் ஆரம்பமாயிற்று; இதற்கு பி. எல். 480 நிதியிலிருந்து ஐந்தாண்டு மானியமாக அமெரிக்கா ரூ. 1,62,770 வழங்கியிருக்கிறது. இந்தியாவின் கறையான்களில் மிகவும் சாதாரணமான இரண்டு வகைகளைச் சோதனைக் குழாயினுள் வளர்க்கவும், அவற்றைப் பற்றிச் சோதிப்பதற்கான முறைகளை ஒழுங்கு படுத்தவும் நமது நாட்டில் இங்குதான் முதன் முறையாக இன்று வழி கண்டு பிடித்துள்ளனர்.



டேராடூன் காட்டுவள ஆராய்ச்சி நிலையத்தின் முக்கிய கட்டடம்: அலுவலகங்களும், ஆய்வுக் கூடங்களும், அரும்பொருட்களஞ்சியங்களும், தலைசிறந்த ஒரு நூலகமும் உள்ள இவ்வழகிய கட்டடம் ஏழு ஏக்கர் நிலப்பரப்பில் நிற்பது.

★

## மருத்துவக் கல்லூரி அட்மிஷன் கமிட்டி

தமிழக மருத்துவக் கல்லூரிகளில் சேரும் மாணவர்கள் தேர்வுக்காக 3 உறுப்பினர்கள் அடங்கிய ஒரு கமிட்டியை அரசாங்கம் ஏற்படுத்தியுள்ளது. இக்கமிட்டிக்கு டாக்டர் பி. எம். சுந்தரவதனம் தலைமை வகிப்பார் எனத் தெரிகிறது. ஸ்டான்லி ஆஸ்பத்திரி டீன் டாக்டர் ஏ. என். கே. மேனன், கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி டீன் டாக்டர் கே. பி. சாரதி ஆகியோர் மேற்கூறிய 3 உறுப்பினர் கமிட்டியில் அங்கம் வகிப்பார்கள்.

## ‘பொழுதுபோக்கு’ கலைஞர்கள்

முறையான ஓவியப்பயிற்சி இல்லாமல் ஓவியம் வரைய முற்படுகிறவர்களை முன்பு ‘ஞாயிறு ஓவியர்கள்’ என கேலியாக அழைப்பதுண்டு. ஆனால் இப்போதெல்லாம் ‘பொழுது போக்கு ஓவியர்கள்’ என முன்னேறியுள்ளனர். மேற்கு ஜெர்மனியில் இவர்களின் ஓவியங்களுக்கு மதிப்பு இருக்கிறது.

ஹாம்பர்க்கில் உள்ள ‘நீங்களே செய்யுங்கள்’ நிலையத்தினர், சமீபத்தில் ஓவியம் வரைய ஆசையுள்ளவர்களுக்கு அவர்கள் என்ன வேலை செய்பவர்களாக இருந்தாலும் தாங்கள் ஓய்வு நேரத்தில் வரைந்த படங்களை கண்காட்சியில்வைக்கலாம் என அழைப்பு விடுத்தது.

‘கத்து குட்டி’ கலைஞர்களின் ஓவியக் கண்காட்சி பெரும் வெற்றி அடைந்து. ஏனெனில் முறையான பயிற்சி இல்லாதவர்கள் தாங்கள் ஓய்வு நேரத்தில் எந்த அளவுக்கு ஓவியம் தீட்டுகிறார்கள்; படம் வரைகிறார்கள்; சிலை உருவாக்குகிறார்கள் என்பதை வெளிப்படையாகக் காட்டுகிறது. மொத்தம் 800 பேர், தாங்கள் உருவாக்கிய ஓவியங்கள், சிலைகளைக் கொண்டுவந்தார்கள். கண்காட்சி அமைப்பாளர்கள், இவற்றில் சிறந்த 300 ஓவியங்கள், சிலைகள் ஆகியவற்றை தேர்ந்தெடுத்தனர். வழக்கமான ஓவியக்கலைஞர்கள் போல, அந்தி சாயும், நேரம்,மலர் பூத்துக் குலுங்கும் மரம், இவற்றை இவர்கள் வரையவில்லை. நகைச்சுவைப் படங்கள், உருவப் படங்கள் (உதாரணமாக கென்னடி சிலை), போன்றவற்றைஇவர்கள் வரைந்துள்ளனர்.

படங்களும், சிலைகளும் கோணலாக இருந்த போதிலும், அதுவரை, வர்ணத்தூரிகை, பென்சில், உளி இவற்றை முறையாகப் பயன்படுத்தத் தெரியாத போதிலும் எதை உருவாக்கவேண்டும் என்பதை தீர்மானித்து அதைத் தைரியமாக செய்கிறார்களே, அதைப் பாராட்டத்தான் வேண்டும். உதாரணமாக முதல் பரிசு பெற்ற 17 வயது தொழிலாளி, ‘வான வெளியில் மனிதன், என்ற படத்தை வரைந்திருந்தார். ஆபத்திலிருந்து குழந்தையைக் காப்பாற்றத் துடிக்கும் தாயின் சிலையை ஒருகப்பல் மெக்கானிக் உருவாக்கியிருந்தார்.

‘கலையைப் பொழுதுபோக்காக’, ஹாம்பர்க்கில் உள்ள இந்நிலையம் வளர்த்து வருகிறது. ஸ்டட்கார்ட், எஸ்ஸென், மேற்குபெர்லின் நகரங்களிலும் இதுபோன்ற நிலையங்கள் திறக்கப்பட இருக்கின்றன. மக்கள் தங்கள் ஓய்வு நேரத்தை சிறந்த முறையில் செலவழிக்க, இந்நிலையம் விரும்புகிறது, வீடுகளில் சுதந்திரமாகப்பணியாற்றும் வசதியுடன், புதைந்து கிடக்கும் திறனும் வெளிப்படுகிறது. மேற்கு ஜெர்மனியில் கைநுட்பத் தொழில் கலைஞர்கள் குறைவு. எனவே இம்மக்கள் ‘கைநுட்ப தொழிலில் கலைஞர்களாக்குவதற்கு இந்நிலையம் உதவுகிறது.

# பிரான்சும் அமெரிக்காவும்

கடந்த சில, வாரங்களாக பிரெஞ்சு அதிபர் டிகால் நாட்டோ ஸ்தாபனத்திலிருந்து தன் உறவை ரத்து செய்து கொள்ளப் போவதாகவும், ஐரோப்பியா பொருளாதாரா ஸ்தாபனத்தின் அங்கத்தினர்களுக்கு புதியதாக ஓர் எச்சரிக்கை அளிக்கப் போவதாகவும், யூ. எஸ் ஜனாதிபதி ஜான்ஸனுக்கும்ஓர்பாடம்கற்பிக்கப் போவதாகவும், இன்ன பிற வதந்திகள் பரவி வருகின்றன. சென்ற ஆண்டு, அண்மையில் பதவியைவிட்டகற்றப்பட்ட அல்ஜீரியா ஜனாதிபதி பென்பெல்லாவிடம் டிகால், நாட்டோ ஸ்தாபனத்தின் ஓர் அங்கத்தினராகத் தான் கருதவில்லை என்று கூறினார் என்றும் சொல்லப்படுகிறது. எது எவ்வாறாயினும் அட்லாண்டிக் கூட்டணியின் இன்றைய அமைப்பை, டிகால் ஆமோதிக்க வில்லை என்பதும், அதைத் தகர்க்கப் பல வழிகளை இவர் ஆராய்கிறார்என்பதும் உலகமறிந்த விஷயம்.

நாட்டோ கூட்டணியிலிருந்து பிரான்ஸ் வெளியேறினால் அச்செயல் பிரான்ஸின் நலனைப் பாதிக்கும் என்றும், அதற்குப் பதிலாக உள்ளிருந்தே ஸ்தாபனத்தின் சீர்திருத்தங்களுக்கு முட்டுக் கட்டை இட்டு, அதன் தீர்மானங்களை நிராகரித்து, ஸ்தாபனத்தின் முன்னேற்றத்திற்கு இவர் முற்றுப் புள்ளி வைக்கலாம் என்று சிலர் அபிப்பிராயம் கொண்டுள்ளார்கள், இத்திக்கில் செயல் பட டிகால் எவ்விதமான நடவடிக்கையைக் கையாண்டாலும், அவைகளில் வெற்றி பெற கால தாமதம் ஆகும். ஆனால், டிகால் வயது முதிர்ந்தவர் என்பது ஓர் பக்கம் இருக்க, வலது சாரி பயங்கரவாதிகள் இவரைத் தொலைத்துக் கட்ட சதி செய்து வருகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. தன்னுடைய தீர்மானங்களை நிறைவேற்றாமல் மறைவு ஏற்பட்டால், இவருக்குப் பின் பதவி ஏற்பவர், மே மாதம் 13-ம் தேதி 1958-ம் ஆண்டுக்கு முன்பு இருந்த அரசியல் நிலையை மீண்டும் இடம் பெற அடிகோலுவார் என்ற ஓர் பயம் இவரை வாட்டுகிறது. நாட்டோ கூட்டணியிலிருந்து இவருடன் வெளியேறுவதற்கு இதர அங்கத்தினர்கள் (முக்கியமாக ஜெர்மனி) விரும்ப மாட்டார்கள். தன் பதவியில் தனக்குப் பிற்காலத்தில் ஆட்சி செய்பவர் யாராயினும் (எம். பாம்பிடௌவ் என்பவருக்கு இப்பதவி வகிக்க வாய்ப்பு உள்ளது என்பதை டிகால் அறிந்து கொள்ள வில்லை) அவருக்குப் புதிய வழியில் செயல் பட முடியாத ஓர் சங்கட நிலையை உருவாக்க டிகால் முயலுவார் என்று சொல்லப்படுகிறது.

அண்மையில், பிரான்ஸுக்கும், அமெரிக்காவுக்கும் இடையே வளர்ந்து வந்த நல்லுறவில் பாதகம் ஏற்பட்டுள்ளது மேற்கூறிய காரணங்களினால் என்று ஊகிக்கப்படுகிறது. ஸான்டாமிங்கோவில் தலையெடுத்த கலவரத்தை ஒடுக்க யூ. எஸ் துருப்புகள் இறக்கப் பட்டதை எதிர்த்தும், வியட் நாமில் அமெரிக்காவின் ஈடுபாட்டைக் கண்டித்தும், இன்ன பிற செயல்கள், யூ. எஸ்ஸுக்கு எரிச்சல் ஊட்டுவதற்காக பிரான்ஸ் கையாண்டவைகள். யூ. எஸ்ஸுக்கு இவைகள் எரிச்சல் விளைவித்ததற்கு ஓர் அறிகுறி, “ஐரோப்பாவில், தலையெடுத்துள்ள புதிய தேசிய மனப்பான்மையைத் தாக்கி, ஜனாதிபதி ஜான்ஸன் நிகழ்த்திய வானொலி உரை. வெளி நாடுகளில் இயங்கும் பிரெஞ்சு தூதராலயங்கள் பேராற்றலுடன், யூ. எஸ்ஸின் கொள்கைகளைக் குறை கூறுவதற்கு இப்பொழுது முன் வந்துள்ளன என்று சொல்லப்படுகிறது.

டிகால் ஆசியாவிலும்’ லத்தீன் அமெரிக்காவிலும், யூ. எஸ் கடைப் பிடிக்கும் நடவடிக்கைகளை எதிர்த்தும், பிரான்ஸுக்கும் கிழக்கு ஐரோப்பியா நாடுகளுக்கும் பல காலமாகவேயே நல்லுறவு வளர்ந்திருக்கிறது என்ற அவருடைய கூற்றும், பிரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் இடையே ஓர் பிளவு ஏற்பட அடிகோலியுள்ளது. அட்லாண்டிக்கூட்டணியில் மேற்கு ஜெர்மனி முதலிடத்தைப் பெற்றுள்ளது அறிந்ததே. கிழக்கு ஜெர்மனியில் மக்கள் ரஷ்ய ராணுவத்தினால் கட்டுப் படுத்தப் பட்டுள்ளதனால் டிகாலின் (ஊரல் மலைத்தொடர் வரை) பரந்த ஐரோப்பா கொள்கை பொதுவாக ஜெர்மனியில் ஆமோதிக்கப் பட வில்லை. இதையொட்டியும் அண்மையில், மேற்கு ஜெர்மனி அதிபர் எர்ஹார்டு கண்டனம் தெரிவித்துள்ளார்,

ஜெர்மனியின் ஒத்துழைப்பு இல்லாமல் பொருளாதாரத் துறையிலும் இராணுவத் துறையிலும், ஐரோப்பாவில் வளரும் சக்தியிலிருந்து பிரான்ஸ் பலன் பெற வாய்ப்பு இருக்காது இன்றுட்கள்ளாக, அந்நிய நாட்டு உறவு வளர்ச்சிக்காக செயல்பட்ட டிகாலின் வழிகள் பிரான்ஸுக்கு உண்மையாகவே நற்பலன்களை தேடிக் கொடுத்ததாகத் தெரியவில்லை. பீகிங்குடன் நெருங்கிப் பழக பிரெஞ்சு ராஜதந்திரங்கள் வழி வகுத்த போதிலும், இதர நாட்டு ராஜதந்திரங்களுக்கு அளிக்கப்படும் அளவுக்குத் தான் அவர்களுக்கும் கௌரவம் அளிக்கப் படுகிறது. அடுத்தகையில் ஆப்பிரிக்காவில், பிரான்ஸின் கொள்கைக்கு எதிரிடையாக நடவடிக்கைகள் தலையெடுக்க சீனா நிதி உதவி அளித்து வருகிறது. தெற்கு சீனாவுடன் வர்த்தகத்தை அதிகரிப்பதற்கு ஹை ஃபாங் துறை முகத்தை வரித்தடையின்றி உபயோகிக்க பிரான்ஸ் எடுத்துக் கொண்ட முயற்சி பலன் அளிக்கவில்லை. லத்தின் அமெரிக்காவில், யூ. எஸ்ஸுக்கு எதிராக பிரான்ஸ் பிரசாரங்களில் ஈடுபட்டு வந்த போதிலும், லத்தீன் அமெரிக்கர்கள் அவர்கள் கற்கும் முதல் ஐரோப்பிய மொழி ஆங்கிலமே யொழிய பிரெஞ்சு மொழியல்ல.

நாட்டோவிலிருந்து வெளியேறுதல், ஐரோப்பியப் பொது மார்க்கெட்டின் இறக்கைகளை ‘ வெட்டி விடுதல், ஐ. நா. ஸ்தபனத்தை உடைத்து விடுவதோ அல்லது திருத்தி அமைப்பதோ முதலிய கொள்கைளை டிகால் கடைபிடிக்கலாம். ஆனால், அவைகளை எவ்வாறு, எவ்வளவு விரைவில் நிறைவேற்ற அவர் வழிதேடுவார் என்பதுசொல்லுவதற்கில்லை இத்தகைய மனப்பான்மையின் காரணத்தினால் யூ. எஸ்ஸுக்கும், பிரான்ஸுக்கும், உள்ள உறவில் விரிசல் அகன்று கொண்டே போகிறது. இத்தகைய விளைவை டிகால் பொருட்படுத்துவதாகத் தெரியவில்லை. இவருடைய கொள்கைகளினால் ஏற்படும் விளைவுகளின் பயன்களை இவருக்குப் பின் பதவி ஏற்பவர் பெருத்த அளவு அனுபவிக்க நேரிடும் என்பதில் மாறுபட்ட கருத்துக்கள் இரா.

இலக்கியச் சுவை

# கம்பனின் கற்பனை நயங்கள்

— புலவர். முத்து வேங்கடேசன்

**இருட்டு:**

**‘இரவுப் பொழுதில் மட்டும் வரும் இருட்டு, பகல் முழுவதும் எங்கே போயிருந்தது? எங்கேயும் போக வில்லை. மனிதனின் மனத்திலேதான்’ என்ற கருத்துப்பட ஒரு பிரபலக் கவிஞர் கவிதையொன்று கண்டிருப்பதாக ஒரு நினைவு.**

**அறியாமை நிரம்பிய மனத்தை ‘இருட்டு நிறைந்தது’ என்று சொல்வது ஓர் இலக்கிய வழக்காகும்.**



கம்பன் மனவிருட்டைப் பற்றி எழுதியுள்ள பாடல், அவன் தன் கற்பனை நோக்கைச் செம்மை செய்வதாக அமைகிறது.

கூனி கொடுமைமிக்கவள்; கைகேயி தன் கொடுமையினும் கூனியின் கொடுமையே மிகுந்து காணப்படுகிறது. செம்மையான மனம் உடையகேகயன்மடந்தை, மந்தரையின் கொடுமை மிக்கச் சொற்கேட்டல்லவோ மனம்மாறி கொடுவினை செய்திட முனைந்தாள்!

அயோத்தியினின்றும் இராமன் காடு நோக்கிச் செல்கின்ற வேளையில் இராப்பொழுது குறுக்கிடுகின்றது. அந்த இருட்டு வேளையை வர்ணிக்க முனைந்த கம்பன்,

‘அந்தியில் வெயிலொளி
யழிய வானகம்
நந்தலில் கேகயன்
பயந்த நங்கைதன்
மந்தரை யுரையெனும்
கடுவின் மட்கிய
சிந்தையி னிருண்டது
செம்மை நீங்கியே.,

என்று கவிதை கண்டான்.

பகலவன் ஒளி நீங்கியதனால் வானகம் ஒளி மங்கிக் காணப்பட்டது. இருளின் சூழல் நிலவியது. அவ்விருள், மந்தரையின் உரையாகிய கொடிய விடத்தால், தன் செம்மைநிலை கெட்டுப்போகிய கேகயன் பயந்த மங்கையின் மனம்போலத் தோன்றியதாம்.

வானத்திலே செம்மை நீங்கியது.
கைகேயி மனத்திலும் செம்மை
நீங்கியது.

‘இருட்டுப்போல்சிந்தை’ என்று கூருமல், ‘செம்மை நீங்கிய சிந்தைபோல் இருட்டு’ என்று கூறியதில் ஒரு நயம் காணலாம்.

‘வானத்திருட்டு மாறும். கைகேயி மனத்திருட்டு மாருது’. என்பதனைச் ‘சிந்தையின் இருண்டது’ என்ற சொற்கள் புலப்படுத்தி நிற்கின்றன. மாருத ஒன்றை, மாறுகின்ற பொருளுக்கு உவமையாகக் கூறுவது ஓர் உவமை வழக்கு என்பதனை அறிய வேண்டும். [திங்கள் போல் முகமெனில்—திங்கள் மாருத் தன்மைத்து. முகம் மாறும் தன்மைத்து.] அவ்வுவமை வழக்கைப் பின்பற்றியே கம்பரும் ‘சிந்தையி னிருண்டது’ என்று உவமை கூறினுர் எனலாம்.

**ஒளி :**

இருள் செறிந்த நேரத்தே உதிக்கின்ருன் நிலவுச் செல்வன்.

அச் செல்வனைக் கம்பன் கவியுள்ளம் காணுகின்றது. உடனே கவிதை யொன்றைப் பாடுகின்றது.

‘மருமத்து தன்னை ஊன்றும்
மறக்கொடும் பாவந் தீர்க்கும்
உருமொத்த சிலையி னுரை
ஒருப்படுத் துதவி நின்ற
கருமத்தின் விளைவை யுன்னிக்
களிப்பொரு காண வந்த
தருமத்தின் வதன மென்னப்
பொலிந்தது தனிவெண் திங்கள்’

[தைலமாட்டுப்படலம்-பா-50]

தரும தேவதையின் இரு செல்வர்கள் போலத் திகழ்கின்றனர் இராம, இலக்குமணர்கள். தன்னைக்கொல்ல வருகின்ற கொடிய பாவத்தை ஒழித்துக் கட்ட காடு நோக்கி வரும் இராம இலக்குமணர்களைக் கண்டாள் தரும தேவதை. அப்போது அவள் முகம் மலர்ந்து மகிழ்ந்ததாம். அந்தத் தரும தேவதையின் மலர்ந்த முகம் போலக் காணப்பட்டதாம் திங்கள்.

‘தருமத்தின் வதன மென்னப்
பொலிந்தது தனிவெண் திங்கள்!’

—கம்பனின் கற்பனை யெழிலைப் பாருங்கள்.

தருமமும் ஒன்றே; திங்களும் ஒன்றே தருமமும் அழியாது; திங்களும் அழியாது. தருமமும் சில சமயம் மறையக் கூடும். திங்களும் சில சமயம் மறையும். ஆனல் தருமமும், திங்களும் ஆய இரண்டும் எப்போதும் அழியாதன.

பண்புகளைக் பெண்ணுக்கி மகிழ்வது கம்பனைப் போன்ற கவிஞர்களுக்கு ஒரு விளையாட்டு.

தருமம் என்பது நுண்பொருள். வள்ளுவர் கூறுவது போல் மனத்தின் தூய்மை நிலை. நுண்பொருளைக் காட்சிப் பொளாக்கி, அப்பொருளையே இயற்கையை விமரிசனம் செய்யும் உவமையாக்கும் கம்பனின் கற்பனை நயத்தை என்னென்க!

**அழியா அழகு !**

இராமபிரான், இலக்குமணனேடும் சீதையோடும் கானகம் நோக்கிச் செல்லுகின்ற காட்சியைக் கம்பன் பாட்டுள்ளம் பார்த்து விடுகின்றது! பாடுகின்றது:

வெய்யோனொளி தன்மேனியின்
விரிசோதியின் மறையப்
பொய்யோவெனும் இடையாளொடும்
இளையானெடும் போனன்.
மையோ!மர கதமோ!மறி
கடலோ!மழை முகிலோ!
ஐயோ!இவன் வடிவென்பதோர்
அழியா அழ குடையான்.

அழியா அழகே இறைவன். நக்கீரரும் ‘கைபுனைந்தியற்ற கவின் பெருவனப்பு’ என்று சொல்லிச் சென்ருர். கம்பனும் ‘ஓவியத்து எழுத வொண்ணு உருவத்தான்’ என்று இறைவன் அழகை எடுத்துச் சொல்வான். இப்பாடல் ராமனின் புறவழகைக் கூறுவதோடு மட்டும் அமையாது, அவன் தன் அக அழகையும் நுணுக்கமாகப் புலப்படுத்தி நிற்கிறது.

‘இறைவனை மனிதனுக்கி, மனிதனுக்குத் தெய்வத் தன்மையை ஏற்றி, அம்மனிதனை இறை[illegible]வமாகக் கருதவேண்டும்’ என்பதனை அடிக்களனுகக் கொண்டே கம்பர், இராமாயணம் யாத்திருக்கிருர் என்று சொல்ல இடமிருக்கிறது. ‘மனிதனும் இறைவன்’ என்பதே கம்பனின் உட்கோளாக அமைகிறது. இப்பாட்டு இராமனை மனிதனுக்கி, அதே நேரத்தில் அவன் தன் இறைக்குணங்களை வெளிப்படுத்தி, இராமனே இறைவன்!’ என்பதனை மெய்ப்படுத்தியுள்ளது.

**சோதி நிழல் :**

‘ஒளி’ என்பது புறவயப்பட்டது. ‘சோதி’ என்பது அகவயப்பட்டது. பொருளின் எல்லை ஒளி. அருளின் எல்லை சோதி. அருள் எல்லாப் பொருள்களையும் தன் வயப்படுத்துகின்ற சக்தி வாய்ந்தது. அதாவது அருளின் வடிவாகிய சோதி, பொருளின் வடிவாகிய ஒளியைத் தன்னுள் ஆட்கொள்ளும். இக்கருத்தை வெளிப்படுத்திக் காட்ட முனைந்த தத்துவத் தமிழ்க் கவிஞராகிய கம்பர்,

‘வெய்யோனொளி தன்மேனியின்
விரிசோதியின் மறைய’

என்று கூறினுராதல் வேண்டும்.

வெய்யோன் ஒளி வெப்பம் வாய்ந்தது. இராமன் மேனியின் விரிசோதி தண்மை வாய்ந்தது. தண்மை வெப்பத்தை தன் வயப்படுத்தியது.

இவ்வரிகளுக்கு வேறு விதமாகவும் பொருள் கூறுவர்: வெப்பம் நிறைந்தகாடு. அக்காட்டில் சீதை முன்னே செல்கின்ருள். இராமன் பின்னே செல்கின்ருன். வெய்யவன் வெப்பம் மலர் மேனி சீதையைத் தாக்குகிறது. அப்போது இராமபிரானின் விரிசோதி மேனி நிழலாக அமைந்து சீதையின் வெப்பத்தைத் தணிவிக்கின்றது ‘ஒளி’ என்பதும் ‘சோதி’ யென்பதும் வெவ்வேறு கருத்துப்படும் சொற்களாதலின், மேற்கூறிய பொருளே ஏற்புடைத்து.

**பொய்யோ !**

‘பொய்யோ!’ எனும் இடையாளையும் வெய்யோனொளி தாக்கியது! இராமனுகிய அருட்சோதி நிழல் அனங்கினைக் காத்தது!

முதல்வரி இராமனின் அகச்சிறப்பைப் புலப்படுத்தியது.

‘பொய்யோ!’ என்பதில் ஒரு நயம்: சோதி—மெய்: உடல்—பொய். அழிதல் தன்மைத்தாகிய உடல், இறைவனின் அருட்சோதி நிழலால் பாதுகாக்கப் பெறுகிறது. அப்படியென்ருல் சீதை பொய்யா! அவள் இறைவியாயிற்றே! இல்லை: அவள் பொய் இல்லை. அவள் இடை தான் பொய் போல் தோன்றுகிறது. இதனைப் ‘பொய்யோ!’ என்ற சொல் புலப்படுத்தி நிற்கிறது. இனி இராமனின் புறவழகைப் பாடுகிருர்:

**ஐயோ !**

மையோ! மர கதமோ! மறி
கடலோ! மழை முகிலோ!
ஐயோ! இவன் வடிவென் பதோர்
அழியா அழ குடையான்’

இராமன் அழகு சொல்லும் இக் கம்பன் வரிகளும் அழகுடையது தான்.

இராமன் மேனி யழகை விவரிக்க விழைந்த கம்பன், ஒப்புமைப் பொருளாக நான்கை எடுத்துக்கொண்டான்.

இராமன் மேனி,
‘மையோ!’—இல்லை!
மரகதமோ!—இல்லை!
மறிகடலோ!—இல்லை!
மழைமுகிலோ!—இல்லை!

பின் இராமனின் மேனிக்கு எதுதான் ஒப்புமையாகும்? ஒன்றும் ஒப்புமையாகாது! ‘தனக்குவமை இல்லாத இறைவனுக்கு’ எப்பொருள் தான் ஒப்புமையாகும்! கம்பனும் இந்த இடத்தில் தோற்ருன். ‘ஐயோ!’ என்ருன். அதாவது என்னுல் கூட இராமனின் மேனியழகுக்கு ஈடான உவமை கூற முடியவில்லையே என்பதனை ‘ஐயோ’ என்ற சொல் லிட்டுக்குக் கம்பன் காட்டினுன் போலும்.

‘மையோ! மரகதமோ! மறிகடலோ! மழைமுகிலோ!’ என்று கூறத் தக்க இறைவனும் காடு நோக்கிச் செல்கின்ருன்! என்ற இரக்க உணர்ச்சி மேலிட கம்பன் ‘ஐயோ!’ என்று கூறினுன் என்றும் கூறலாம்.

உள்ளும் புறமும் ஆராய்கின்ற இப்பாட்டு தமிழ்ச் சுவை விழையும் மாந்தர்க்குச் ‘செவிநுகர் கனி’யாகச் சிறந்து விளங்குகின்றது.

கம்பன் கவிதையைப் படித்து விட்டுத்தான் போலும் பாரதி, ‘கவிதை—தெய்வம், திரவியம்’ என்றெல்லாம் கூறினுன் போலும்!

——

[ 1-ம் பக்கத் தொடர் ]

டிருக்கிறது. பிரிட்டிஷ் பிரதமரின் ‘வியட்நாம் சமாதானக்குழு’ யோசனைக்குப் பாரதம் முழு ஆதரவு கொடுக்க முன்வந்ததற்கு அடிப்படைக்காரணமிது. ஆனல், சைனுவோ தன்னுடைய முதலாளித்துவ எதிர்ப்பைக்காட்டிக் கொள்வதற்கு வியட்நாம்சிக்கலைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்து, வில்ஸனின் சமாதானக்குழு யோசனையை நிராகரித்து வருகிறது.

காஞ நாட்டு அதிபர் டாக்டர் என்குருமாவின் தலைமையில் அமைக்கப்படவிருந்த இந்த சமாதானக் குழுவில் இணைந்து பணியாற்றவும், அவசியமேற்பட்டால் அதிபர் என்குருமாவின் பொறுப்பில் இருந்து தலைமைப்பதவியை ஏற்று, சமாதானக் குழுவை இயங்கச் செய்யவும் பாகிஸ்தான் அதிபர் அயூப்கான் தன்னுடைய விருப்பத்தை வில்ஸனிடம் தெரிவித்திருக்கிருர். சூ-என்-லாய் தன்னுடைய சீடப்பிள்ளையொன்றின் இத்தகைய நடவடிக்கையைக் கண்டிக்கத் திராணியற்று, அந்தக் கசப்பையெல்லாம் பாரதத்தின்மீதும், தனக்குப் பிடிக்காத மற்ற ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின்மீதும் திருப்பிவிடுவதற்கு அல்ஜியர்ஸ் மகாநாட்டை மிகவும் நம்பியிருந்தார். ஆனல் நவம்பர் ஐத்தாம் தேதிக்கு இந்த மகாநாடு ஒத்திவைக்கப்பட நேர்ந்துவிட்டதால், பீகிங்கின், வியட்நாம் சமாதானக்குழுபற்றிய கொள்கைகளும், கண்டனங்களும் குழிதோண்டிப் புதைக்கப்பட நேர்ந்துவிட்டிருக்கிறது.

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10. Single copy: Twelve Paise.